# சீடாசார[illegible]மும்

# பாலபோதிநி உரையும்.





காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்
திருப்பூவணம்

நான்கு அணு

Registerd.] 1930 [Copy-right.

உ

சிவமயம்.

கோவிலூர் மடம்

ஸ்ரீ அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்

திரட்டிய

# சிடாசார மூலமும்

திருக்களர்

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள்

மாணாக்கர்

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# பால போதிநி என்னும் உரையும்.

இவை

காளையார் கோவில் மடம்

ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஸ்வாமிக ளவர்கள் கேட்டுக்கொண்ட பிரகாரம்

கோவிலூர் மடாதிபதி

**ஸ்ரீலஸ்ரீ மஹா தேவ ஞாந தேசிகஸ்வாமிக ளவர்கள்**

பொருளுதவி பெற்று

சென்னை

நோபில் பிரசில்

அச்சியற்றப்பெற்றன.

1929.

24-5

# முகவுரை.

---

இந்தச் சீடாசாரம் என்னும் நூல் கோவிலூர் மடாலயம் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிகர் ஆதீனத்தில் இரண்டாவது குரு மூர்த்தமாக எழுந்தருளியிருந்த துறவு ஆண்டவர் என்னும் காரணப் பெயர் வாய்ந்த அருணசல ஞான தேசிக ஸ்வாமிகள் என்பவர்கள் தமது தம்பி யாகிய சிதம்பர ஞான தேசிகர் தமது ஆசாரியரை அகன்று ஆளுடையார் கோவிலிற் சென்று ஏகாந்த ஸ்தாநத்தை யடைந்திருக்கக் கருதிச் சென்றதைக் கேள்வியுற்று ஆசாரியரை விட்டு அகலாது அருகி லிருக்க வேண்டு மென்னும் கருத்துட் கொண்டு அவ்வுடன் பிறந்த சிதம்பரம் என்றும் கருணை நிதி யென் றும் வழங்கும் இளையோர் பொருட்டு ஒரு வசநம் எழுதி அதற்குப் பிரமாணமாகத் தத்துவராய ஸ்வாமிகள் பெருந்திரட்டுக் குறுந் திரட்டுக்களை ஆதாரவாகக் கொண்டு வாசிஷ்டச் செய்யுள் 1, ஒழி வி லொடுக்கச் செய்யுள் 1, சிவ நெறிப்பிரகாசச் செய்யுள் 1, சிவாநந்த நிலயச் செய்யுள் 1, போதசாரச்செய்யுள் 1, சிவப்பிரகாச தரிசநச் செய்யுள் 1, தத்துவபோதச் செய்யுள் 1, தத்துவ சரிதைச் செய்யுள் 1, ஞான சித்திச் செய்யுள் 1, போத சித்திச் செய்யுள் 1, திருமந்திரச் செய்யுள் 1, பாடுதுறைச் செய்யுள் 1, சமயசாரச் செய்யுள் 2, மெய்ந் நெறி விளக்கச் செய்யுள் 2, போதரத்நாகரச் செய்யுள் 2, அருட்பிர காசச் செய்யுள் 3, மூலசித்திச் செய்யுள் 3, ரிபு கீதைச் செய்யுள் 3, போதாமிர்தச் செய்யுள் 4, ஞானசாரச் செய்யுள் 4, மெய்ம் மொழிச் செய்யுள் 6, பிரஹ்ம கீதைச் செய்யுள் 7, நூற்பெயர் தெரியாச் செய்யுள் 2 - ஆக ஐம்பது செய்யுட்களைத் திரட்டி எழுதி யனுப்பி னார்கள். அந்நூல் படிக்கும் சிறிய முமுக்ஷுக்கட்கு உரை யின்றி பொருள் விளங்கல் அருமை யெனக் கருதி பொருள் எளிதில் விளங்குமாறு பால போதிநி என்னும்பெயருடன் ஓர் உரை எழுதி முற்றுவித்தனம்.

15-5-29 கா - சுவாமிகள், திருப் பூவணம்.

## பாயிரம்.

திருவளர் துறவைச் சுகரென விளக்கித் திகழ் குணங் களுக்குறை விடமாய்த், தெருளொடு பத்தி கருணை நல் விராகஞ் சேர்ந்தொரு வுருவமா யிலகும், மருளடு மருணா சலமூகி பதத்தை மநமொழி மெய்களால் வணங்கி,யிருளிரி சீடா சாரத்தி னுரையை யியம்புவன் மாணவர் மகிழ.

அதனது நாமம் பில்போ திநியென் றழகுற விருப்புட னமைத்து, விதமுறு பாவி னைம்பதின் பொருளும் விளங் கவே செவ்விய மொழியி, லிதமதாய்த் தருகென் மாணவ னிராசு வியம்பவே யவன்பணி வசமாய்த், திதம்பெறச் செய்த வுரையினை வீர சேகர விறைபதஞ் சேர்ப்பாம்.

முன்னோர்செய் ஞான நூல்கள் முழுதுமாய்ந் தவையி னுள்ள, பொன்னான சீடா சாரம் பொருந்துபா வனைத் துஞ் சேர்த்தான், இந்நாளி லெவரு முய்வா னெழிலரு ணாசலேசன்; பன்னாளு மவன்பொற் பாதம் பணிந்துபற் றறுப்பா மன்றே.

சிவமயம்

அருணசல ஞாந தேசிகர்
சிதம்பர ஞாந தேசிகர் பொருட்டு எழுதிய

## சீடாசார வசநம்.

ஸ்திரீ நாயகனேடு கூட இருந்தால் பணி விடை செய்யவேண்டும் என்றும் தனித்து இருந்தால் சுகமாய் இருக்கலாம் என்றும் நினைத்து அந்த நாயகனுக்கு மந வருத்தம் உண்டாகும்படி அவனை விட்டு நீங்கி இருந்தால் இம்மையில் சுகமும் இழந்து மறுமையில் நரகத் துன்பமும் அநுபவிப்பது போல, சிஷ்யன் ஞாநாசாரியரைத் தேடிக் கண்டு சரணுகதி யடைந்து சில சாஸ்திரங்களை அப்பியாசித்து அறிந்த பின் "நாம் இனி இவரிடத்தில் இருந்தால் இவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்க வேண்டும் நமது சிரவணுதி அநுசந்தாநத்திற்கு விரோதம் வரும இவரிடத்தில் இருக்கில் நமது சரீரத்திற்கு ஒத்துக் கொள்ளாது" எனக் கருதி அந்த ஞாநாசாரியருக்கு மநதில் துவேஷம் உண்டாகும்படியாக அவரை விட்டு நீங்கியிருக்கின் அவனுக்கு இம்மையில் துன்பமும் மறுமையில் நரகமும் உண்டாகும். ஆகையால் கற்புடைய ஸ்திரீ அறியாமையைப் பொருந்தி யிருந்தும் ஆத்ம ஸ்வரூபத்தினை அறியாமல் அநாத்ம ஸ்வரூபமே தான் என்றிருக்கின்ற தனது நாயகனைத் தெய்வமாகப் பாவித்து அவன் அடித்தல் வைதல் முதலியவற்றைச் செய்த போதிலும், அவனிடத்தில் துவேஷம் இன்றிப் பிரியமாகவே தேகம் உள்ளவரை அவனை விட்டு நீங்காமல் திரிவித கரணங்களாலும் பணி விடை செய்துகொண் டிருக்க இம்மையிற் சுகத்தையும் மறுமையில் ஸ்வர்க்காதி லோகத்தையும் அடைவது போல, உத்தம விவேகம் உள்ள சிஷ்யன் ஞாநாசாரியரைச் "சத்திய ஞாந அநந்த ஆநந்த பரம சிவம்" என்று வேதாதிகள் சொன்ன பிரகாரம் நம்பி அவர் அடித்தல் வைதல் முதலியவற்றைச் செய்யினும், செய்யத்தகாத கிருத்தியங்களைச் செய்யச் சொன்ன போதிலும் வெறுப் படைந்து அவரை விட்டு நீங்காதபடி மிகுந்த பிரியத்தோடு தேகம் உள்ள வரையும் திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்து நின்று அந்த ஞாநாசாரியர் கிருபையினுல் தத்துவ ஞாநத்தினைப் பெற்று மோக்ஷம் அடைய வேண்டும் என்று வேதாகம புராண இதிகாசாதிகள் கூறுதலால், இப்போ திருக்கின்ற முமுக்ஷுக்களும் இதிற் சொன்ன பிரகாரம் ஞாநாசாரியரைப் பரம சிவம் ஆகப் பாவித்துத் தேகம் உள்ள பரியந்தமும் அவரை விட்டு நீங்காமல் திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்து நின்று அவர் கிருபையால் உண்டாகாநின்ற தத்துவ ஞாநத்தினுல் பரமோக்ஷ சுகத்தை யடைய வேண்டியது. சீடாசார வசநம் முற்றுப் பெற்றது.

---

உ

சிவமயம்

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிகாய நமஃ.

# சீடாசாரம் மூலமும் உரையும்.

தான் எடுத்துக்கொண்ட கிரந்தம் நிர்விக்கிநமாக நிறைவேறும் பொருட்டுச் சகுண ரூப ஷட்வித தெய்வ வணக்கம் கூறுகின்றார்.

**ஆனைமுக னாறுமுக னம்பிகைபொ னம்பலவன்**
**ஞானகுரு வாணியையு ணாடு.**

(இதன் பொருள்.) ஆனைமுகன்—கஜ முகக் கடவுளையும், ஆறு முகன்—ஷண்முகக் கடவுளையும், அம்பிகை—சிவகாம சௌந்தரியையும், பொன் அம்பலவன்—கநக சபைக் கடவுளையும், ஞாந குரு—ஞாநாசாரியரையும், வாணியை—சரஸ்வதி தேவியையும், உள்—மநத்தின்கண், நாடு—(நீ) தியாநிப்பாயாக, (எ—று.)

மோக்ஷ ஹேதுவினைக் கூறல்.

நூற் பெயர் தெரியாது.

**1. தந்தை தாயுமெய்த் தகவுடை யுறவுஞ் சாலுங் கல்வியுந் தகுமுயிர்த் துணையுஞ், சிந்தை யாருகற் சீலமும் வலியுந் திருவு மின்பமுஞ் சிதைவிலா வறிவு, முந்தை யாமுளத் துவகையு முயிரு மூல முத்தியு மொழிவருஞ் சமைவு, மெந்தை யாகிவந் தேழையே னையுமா ளிறைவ னார்கழ லாகுமென் றனக்கே.**

(இ—ள்.) எ(ம் த)ந்தை ஆகி—எமது பிதாவாகி, வந்து (கருணையினால் எழுந்தருளி) வந்து, ஏழையேனையும்—(ஞாநம் இல்லாத) ஏழையாகிய என்னையும், ஆள் - (தடுத்து) ஆட்கொண்ட, இறைவனார்

- (பிரஹ்ம ஞாந) ஆசாரியரது, கழல் - திருவடி (த் தாமரை)யே, என் தனக்கு - எனக்கு, தந்தை - தந்தையும், தாயும் - மாதாவும், மெய் - யதார்த்தமான, தகவு உடை - தகுதி உடைய, உறவும் - சுற்றத்தார்களும், சாலும் - உயர்ந்த, கல்வியும் - வித்தையும், தகும் - தகுதியான, உயிர் - ஜீவனுக்கு, துணையும் - சஹகாரியும், சிந்தை - மநத்தின்கண், ஆரும் - பொருந்தியிருக்கின்ற, நல்- உயர்ந்த,சீலமும் - ஒழுக்கமும், வலியும் - சாமர்த்தியமும், திருவும் - ஐஶ்வரியமும், இன்பமும் - ஆநந்தமும், சிதைவு இலா - கெடாத, அறிவும் - ஞாநமும், முந்தை ஆம் - முதன்மையாகிய, உளத்து - மநத்தின்கண், உவகையும் - சந்தோஷமும், உயிரும் - ஜீவனும், மூலம் - காரணமான, முத்தியும் - மோக்ஷமும், மொழிவு - கூறற்கு, அரும் -அரிய, சமைவும் - பொறுமையும், ஆகும் - (ஆகிய பதினன்கும்)ஆம், (எ - று.) ஏ: அசை.'என்தனக்கு' என்பதில் 'தன்' அசை. (1)

பாடு துறை.

2. தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு - மெந்தமுயிர்
தானகு வானுஞ் சரணகு வானுமருட்
கோனகு வானுங் குரு.

(இ - ள்.) குரு - (ஞாந) ஆசாரியரே, தந்தை - பிதாவும், தாய் - மாதாவும், ஆவானும் - ஆகுபவனும், சார் - அடையாநின்ற, கதி - பத மோக்ஷம், இங்கு - இவ்விடத்து, ஆவானும் - (தருபவன்) ஆகுபவனும், நமக்கு - நமக்கு, அந்தம் இலா - நித்தியமான, இன்பம்- ஆநந்தத்தை, ஆவானும் - (தருபவன்), ஆகுபவனும், எம் - எமது, உயிர் - பிராணன், ஆகுவானும் - ஆகுபவனும் சரண் - (அடையத் தகுந்த) திரு வடி, ஆகுவானும் - ஆகுபவனும், அருள் - ஞாநத்தினை (கொடுக்கின்ற), கோன் - இறைவன், ஆகுவானும் - ஆகுபவனும் (ஆவர்), (எ - று.) தம் தான் அசை. (2)

மெய்ம் மொழி.

3.முத்திசித் திக்கு மேது மொழிவர்கள் சிலர்வெவ் வேறே
சித்தமற் றுலா மென்றுந் தீவினை சிதைந்தா லென்று

**மொத்தநல் லியோகா லென்று முரியஞா நத்தா லென்று**
**மித்திற மனைத்தா லாகா திறைதிரு வருளா லாமே.**

(இ - ள்.) முத்தி - மோக்ஷம், சித்திக்கும் சித்திப்பதற்கு, ஏது - காரணமாக, சிலர் - சிலர், சித்தம் - மநம், அற்றால் - நாச மடையின், ஆம் - (மோக்ஷ சித்தி) ஆம், என்றும் - எனவும், தீவினை - பாப கர்மங்கள், சிதைந்தால் - நாசமடைந்தால், என்றும் - (மோக்ஷ சித்தியாம்) எனவும், ஒத்த - சமமான, நல் - நல்ல, யோகால் - யோகாப்பியாசத்தினால், என்றும் - (மோக்ஷ சித்தியாம்) எனவும், உரிய - உரித்தாய் உள்ள, ஞாநத்தால் - (ஆத்ம) ஞாநத்தினால், என்றும் - (மோக்ஷ சித்தியாம்) எனவும், வெவ் வேறு - வேறு வேறு பிரகாரமாக, மொழிவர்கள் - கூறுவார்கள், இத்திறம் அனைத்தால் - இவ்வாறாய (நால்வகை) எல்லா உபாயங்களினாலும், ஆகாது - (மோக்ஷசித்தி) ஆகாது, [குரு கிருபையினால் ஆம் எனக் கூறுகின்றார்.] இறை - ஆசாரியரது, திரு அருளால் - உயர் கிருபை ஒன்றினால் மாத்திரம், ஆம் - (மோக்ஷ சித்தி) ஆகும், (எ-று.) ஏ ஏ அசை. (3)

மெய்ம் மொழி.

**4. எஞ்ஞாந மந்தி ரங்கள் யோகங்க ளுபாய மெல்லா**
**மெய்ஞ்ஞாந வீட்டைக் காணும் வேதநஞ் செய்ய மாட்டா**
**தெஞ்ஞாநக் கடைக்கண் வைத்த தேசிகன் சித்த மத்தி**
**லஞ்ஞாநம் பறிந்த போதே யமுதவீ டதுவுந் தோன்றும்.**

(இ - ள்.) எஞ் ஞாந மந்திரங்கள் - எவ்வாறாய ஞாநங்களும் மந்திரங்களும், யோகங்கள் - யோகங்களும், எல்லா உபாயம் - (ஆகிய) சர்வ சாதநங்களும், மெய் - உண்மையான, ஞாந - (ஆத்ம) ஞாநத்தினால் (அடையத் தக்க), வீட்டை - மோக்ஷத்தினை, காணும் - அடையும்படி, வேதநம் செய்ய - அறிவிக்க, மாட்டா - ஆற்றல் அற்றனவாம், [ஞாநாசரியரது கிருபையே மோக்ஷ காரணம் எனக் கூறுகின்றார்] தெண் - தெளிந்த, ஞாந - ஞாநத்தோடு கூடிய, கடைக்கண் - கிருபாவீக்ஷண்யத்தை, வைத்த - (நம்மீது) சாற்றிய, தேசிகன் - ஆசாரியர், சித்த மத்தில் - (நமது) சித்தத்தில் உள்ள,

அஞ்ஞானம் - அஞ்ஞானத்தினை, பறிந்த - களைந்த, போதே - காலத்திலேயே, அமுத - நித்தியமாயுள்ள, வீடதுவும் - மோக்ஷமும், தோன்றும் - உண்டாம், (எ - று.)

"வீடதுவும்" என்பதில் 'அது' பகுதிப் பொருள் விகுதி, "சித்தமத்தில்" என்பதில் அத்து சாரியை. (4)

மெய்ம் மொழி.

**5. ஆர்த்தது பிறவி யென்று மஞ்ஞான பாச மத்தைக், கூர்த்தமெய்ஞ் ஞான வாளைக் கொண்டுசே திக்க வேண்டு, மத்திமெய்ஞ் ஞான வானை யேயவ னருட்கண் ணாலே, பார்த்தபின் னில்லாப் பெத்தம் பரிதிமுன் னிருள்போ லன்றே.**

(இ - ள்.) அஞ்ஞான பாசம் - அஞ்ஞான பாசமானது, என்றும் - எப்பொழுதும், பிறவி - ஜநந (மரண) ரூபமாக, ஆர்த்தது - (ஜீவனை) பந்திக்கின்றது, அத்தை - அந்த அஞ்ஞான ரூப பாசத்தினை, கூர்த்த - கூர்மையான, மெய் ஞான வாளை - ஆத்ம ஞானக் கத்தியினை, கொண்டு - கொண்டு, சேதிக்கவேண்டும் - அறுக்கவேண்டும், மெய் ஞானவானையே - (அதன்பொருட்டு) ஆத்ம ஞானியினையே, எத்தி - (மந மொழி மெய்களால்) வழுத்தி, அவன் - (அங்ஙனம் துதி முதலியன செய்த பின்) அந்த ஞானி, அருள் கண்ணால் - ஞான திருஷ்டியினால், பார்த்த - ஈக்ஷித்த, பின் - பின்னர், பரிதி - சூரியனது, முன் - எதிரில், இருள் - அந்தகாரம் (இராதது), போல் - போல, பெத்தம் - பந்தமானது, நில்லா - இருக்கமாட்டாது, (எ - று.) ஏ அன்று ஏ அசை. (5)

மெய்ம் மொழி.

**6. விடத்தினான் மூர்ச்சித் தானை விடம்வல்லார் பார்க்கத் தீரு, மடர்த்தல்லா ரெல்லாம் பார்த்து மதுதீரா வாறு போல, விடத்தினை யுடைய ஞான விறைவனாற் பார்க்கி னல்லாற், சடத்துவ மாயை யாற்செய் சடக்குடைப் பிறப்ப றுதே.**

(இ - ள்.) விடத்தினுல் - (நல்ல பாம்பு தீண்டிய) விஷத்தினுல், மூர்ச்சித்தானை-மூர்ச்சை யுற்றிருக்கின்றவனை, விடம் - விஷத்தினை (நிவர்த்திக்கும்படியான), வல்லார் - சாமர்த்தியம் உடைய கெருடத் தியாகிகளே, பார்க்க - ஈக்ஷிக்க, தீரும் - நிவர்த்தியாகும், அல்லார் - (விஷத்தினை நிவர்த்திக்கும்படியான சாமர்த்தியம்) இல்லாதவர், எல்லாம் - யாவரும், அடர்த்து - நெருங்கி, பார்த்தும் - ஈக்ஷணம் செய்தும், அது - அந்த விஷம், தீரா - நிவர்த்தியாகாத, ஆறு - முறைமை, போல - போல், இடத்தினை யுடைய - விசாலம் பொருந்திய, ஞாந - ஞாநத்தினையுடைய, இறைவன் - ஆசாரியன், பார்க்கின் - ஈக்ஷணம் செய்யின், அல்லால் - அன்றி, சடத்துவ - சடத்தன்மையினை யுடைய, மாயையால் - மாயையினுல். செய் - செய்யப்பட்ட, சடக்கு உடை - துக்கத்தினை யுடைய, பிறப்பு - ஜநந (மரண)ம், அருது- நீங்காது, (எ - று.) ஆல் ஏ அசை. (6)

சொரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை 7—11)

7. சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுநின்
றிருமையு மநித்தமென் றேதும் விட்டுநற்
குருவினை வழிபடிற் கோதி லாவவ
'னருளிடு மழிவற நின்ற வப்பொருள்.

(இ - ள்.) சுருதியும் - வேதமும், மிருதியும் - ஸ்மிருதியும், சொன்ன - கூறிய, ஆறு - முறையாக, நின்று-(அநேக ஜந்மத்தில் நன்கு சித்தித்த சுரௌத ஸ்மார்த்த கர்ம தத்பரனுய்) இருந்து, இருமையும் - (இக லோக பரலோகங்கள்) இரண்டும், அநித்தம் - அநித்தியம், என்று - என உணர்ந்து, ஏதும் - ஜகத் பதார்த்தங்களில்,விட்டு- வைராக்கியத்தினை அடைந்து, நல் - (ஞாநத்தினுலே சம்சாரம் நாசமாம் கர்மத்தான் நாசமாகாது என உணர்ந்து சிவ ஞாந சித்தியின் பொருட்டு) சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட, குருவினை - ஆசாரியரை, வழிபடில் - (பிரியத்தோடு) வழிபட்டுவரின், கோது இலா - குற்றமற்ற,அவன் - அந்த (அபரவித்தியா விஷய சம்சார பலத்தினின்றும் விரக்தனுகிய) மாணுக்கனுக்கு, அழிவு அற - நாசம் இன்றி,நின்ற -

இருக்கப்பட்ட, அப்பொருள் - பரவித்தையை, அருளிடும் - (குரு) அநுக்கிரசம் செய்வார், (எ - று.) (7)

இது மூலத்தில் எ வது அத்தியாயத்தில்(20 - 21 - 22)மூன்று சுலோகத்தின் பொருளாம்.

சொரூபாநந்த சித்தி. (பிரஹ்ம கீதை 7—39.)

**8. எண்ணிலாக் கல்வி யாலு மிலங்கிய கேள்வி யாலுந்**
**திண்ணிதா மதியி னாலுந் தெளியவா ராது தீர**
**நண்ணிய ஞாநி தானே நயந்தருள் செய்யில் ஞாநக்**
**கண்ணினாற் காண லாகுங் கரத்திலா மலகம் போல.**

(இ - ள்.) எண் இலா - (இந்த ஆத்மா) கருதற்கரிய, கல்வியாலும் - வேத சாஸ்திரங்களைப் படித்தலினாலும், திண்ணிது ஆம் - நிரந்தார்த்த தாரணஞ் செய்யும் சக்தியுடைய, மதியினாலும் - புத்தியினாலும், இலங்கிய - விளங்காநின்ற, கேள்வியாலும் - (அநேக முறை) சிரவணித்தலினாலும், தெளிய - அடைய, வாராது - முடியாது, தீரம் - திடமாக, நண்ணிய- பொருந்திய, ஞாநி - வித்துவான், நயந்து அருள் செய்யில் - (புகன்ற பிரகாரமான பரமாத்மாவை) அடைய இச்சிக்கில், ஞாநக் கண்ணினால் - அந்தக் காரணத்தினால், காத்தில் - அஸ்தத்தில் உள்ள, ஆமலகம் - நெல்லிக் கனி, போல - போல்,காணல் ஆகும் - அடையலாம் (சிரவண மநந நிதித்தியாசநாதிகளால் அதன் அடைவைப் பிரார்த்திக்கும் வித்துவானுக்கு இந்த ஆத்மா அவித்தையினால் மறைபட்டிருக்கப்பட்ட தனது சரீரத்தினைப் பிரகாசிக்கின்றது), (எ - று.) இது மூலத்தில் எவது அத்தியாயத்தில் 86 சுலோகத்தின் பொருளாம். (8)

ஞாநாசாரம்.

**பருவிடங் கடியுண் டானே பாவிப்பான் கருடன் றன்னைப்**
**பெருகிய பித்தன் றானே பிழிந்துமா மருந்து கொள்வா**
**னிருமையு மறியா மூடர்க் கியலுமோ விறையிற் கூடக்**
**குருபரன் கூட்டிற் கூடுங் கூடாதேற் கூடா தென்றான்.**

(இ - ள்.) பரு - பெரிய, விடம் - விஷத்தினையுடைய, கடியுண்டானோ - (பாம்பினால்) கடிக்கப்பட்டவனோ, கருடன் தன்னை - கருடனை, பாவிப்பான் - தியாநிப்பவனுவன்? (விஷம் தலைக்கேறிய புருஷன் கருடத் தியாநம் செய்யான் என்றபடி), பெருகிய- பெரிய, பித்தன் தானோ-பைத்தியக்காரனு, மா-பெரிய, மருந்து - ஔஷதத்தின், பிழிந்து - ரசத்தை எடுத்து, கொள்வான் - சாப்பிடுவான்? (பைத்தியக்காரன் தானே மருந்து சாப்பிடமாட்டான் என்றபடி), இருமையும் - (அது போல இகலோக பரலோக சாதந கிருத்தியங்கள்) இரண்டினையும், அறியா - உணராத, மூடர்க்கு - அறிவிலிகட்கு, இறையில் - ஈசுவரனது திரு அடியில், கூட - போய்ச்சேர, இயலுமோ-கூடுமா? (இக லோக பரலோக சாதந ஞாந மிலா அறிவிலிகள் சிவ திரு அடியை அடையார் என்றபடி), குரு - (ஞாந) ஆசாரியர், பரன் - பரமேசுவரனது (திரு அடியில்), கூட்டில்- சேர்ப்பிக்கில், கூடும்-(அடைதல்) பொருந்தும், கூடாதேல் - (ஆசாரியர் சிவ திரு அடியை) அடைவியாதிருப்பாராகில், கூடாது - (சிவ திரு அடியை அடைய) முடியாது, என்றான் - என(ச் சிவைக்குச் சிவன்) கூறினான், (எ - று.) (கருடனதன்னை) என்பதில் தன் 'பித்தன் தானோ' என்பதில் தான் அசை. (9)

ஞாநாசாரம்.

**10. கட்டுண்ட கள்வன் றானோ கட்டினை விட்டுக் கொள்வான், விட்டவ்வே தனையைத் தீர்த்து விதிப்பவர் வேறே வேண்டு. மட்டமா சித்தி யோகா லறிவினு லறிய லாமோ, தட்டறப் பாசந் தீர்க்கத் தற்பரங் குருவே வேண்டும்.**

(இ - ள்.) கட்டு உண்ட - (கயிறு முதலிய வற்றால்) கட்டப்பட்ட, கள்வன் தானோ - திருடனோ, கட்டினை (பிறரால் கட்டப்பட்ட) கட்டை, விட்டுக் கொள்வான் - அவிழ்த்துக் கொள்ளுவான்? (திருடன் தன்னைக் கட்டிய கட்டைத் தானே அவிழ்த்துக் கொள்ளான் என்றபடி), விட்டு - (கட்டினை அவிழ்த்து) விட்டு, அவ்வேதனையை - அதனால் உளவாம் துன்பத்தினை, தீர்த்து - நிவர்த்தித்து, விதிப்பவர் (திருட்டுக்குத் தகுந்த தண்டனையை நிவர்த்தித்

துச் சுகியாய் இருப்பாயாக என்று) நியமிப்பவர், வேறு - (திருடனுக்கு) அந்நியமாக, வேண்டும் - (ஒருவர்) வேண்டும், அட்ட மாசித்தி - (அது போல) அஷ்ட மஹாசித்திகளினாலும், யோகால் - (ஹட யோகம் மந்திர யோகம் லயயோகம் ராஜ யோகம் முதலிய) யோகங்களினாலும், அறிவினால் - ஞாநத்தினாலும், அறியல் - (பாச நிவர்த்தியினை) உணர்தல், ஆமோ - கூடுமா (சித்தி யோக ஞாந மாத்திரத்தினால் பாசம் நிவர்த்தியாகாது என்றபடி), பாசம் - (சம்சார) பந்தத்தினை, தட்டு அற - தடையின்றி, தீர்க்க - நிவர்த்திக்க, தத்பரம் - அந்த மேலான, குருவே - ஆசாரியரே, வேண்டும் - வேண்டும், (எ - று.) (10)

திரு மந்திரம்.

**11.** உருவன்றி யேநின்று ருவம்பு ணர்க்குங்
கருவன்றி யேநின்று தான்கரு வாகு
மருவன்றி யேநின்ற மாயப்பி ரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே.

(இ - ள்.) உருவு அன்றியே - அருவமாய், நின்று - இருந்து, உருவம் - உருவத்தினை, புணர்க்கும் - (ஈசன்) தரிப்பன், கருவு அன்றியே - (தனக்கு) காரணம் இன்றியே, நின்று - இருந்து, தான் கருவு ஆகும் - தான் (யாவற்றிற்கும்) காரணமாவன், மருவு அன்றியே - அங்ஙனம் இருந்தும் (எவ்வகைத்தாய) தோஷமும் இன்றி, நின்ற - இருக்கின்ற, மாய - மாயைச்கு அதிஷ்டாநமாகிய, பிரானை - பரம சிவத்தினை, கூட - அடைய, யாவர்க்கும் - எவ்வகைப்பட்டவர்களுக்கும், குரு - ஆசாரியர் (அடைவித்தால் அடையலாமே யல்லது), அன்றி - (குருவை ஒழித்து) மற்றையோரால், ஒண்ணாது - (அடைவிக்க) முடியாது, (எ-று.)
ஏ நான்கும் அசைநிலையின. (11)

மோக்ஷ சாதநத்தினைக் கூறல்.

போத ரத்நாகரம்.

**12.** தேசிகன் பதநற் சேவையின் வலியுந் திகழ்பதத் தளவிலா வன்பு, மாசினன் முத்தி யதில்விருப் பதுவு மமல

வா ரணத்தினில் விருப்பு, நாசமா மிந்த வுடலினில் வெறுப்பு நசையற விடயத்தி லுவர்ப்பு, மீசனெப் பொருளு மென்னு நற் றுணிவு மிவையெழின் முத்திசா தநமே.

(இ - ள்.) தேசிகன் - ஆசாரியரது, பத - திரு அடிக்கு (ச் செய்த), நல் - நல்ல, சேவையின் - சிசுருஷையினால் (உண்டாகிய), வலியும் - சாமர்த்தியமும், திகழ்-விளங்காநின்ற, பதத்து (ஆசாரியரது) திரு வடியில், அளவு இலா - எல்லை யின்றிய, அன்பும் - பக்தியும், ஆசு இல் - குற்றம் அற்ற, நல் - உயர்ந்த, முத்தியதில் -மோக்ஷத்தில், விருப்பதுவும் - விருப்பமும், அமல - நின்மலமான, ஆரணத்தினில்-வேதத்தில், விருப்பும் - விருப்பமும், நாசமாம் - நாசமாகிய, இந்த உடலினில் - இந்தச் சரீரத்தில், வெறுப்பும் - வெறுப்பும், விடயத்தில் - விஷயங்களிடத்தில், நசை அற - விருப்பம் இன்றி, உவர்ப்பும் - உவர்ப்பும், எப்பொருளும் - எவ்வகைப்பட்ட வஸ்துக்களும், ஈசன் - ஈசுவர ஸ்வரூபமாம், என்னும் - என்கின்ற, நல்-நல்ல, துணிவும் - நிச்சயமும், இவை - (ஆகிய எழுவிதமாய) இவைகள், எழில் - சோபையினை யுடைய, முத்தி - மோக்ஷத்திற்கு, சாதநமே - சாதநமாம், (எ - று.) 'முத்தியதில்' என்பதில் 'அது', 'விருப்பதுவும்' என்பதில் 'அது' பகுதிப் பொருள் விகுதி. (12)

போதாமிர்தம்.

13. திகழுநற் குரவன் திருவுளம் பார்த்துச் செய்யுமேவற்சிறப் பதுவு, மகிழுநற் குரவன் மருவுநற் பதியே மன்னிநீங் காதவா தனையும், புகழுநற் றமரும் பொன்முதற் பொருளும் பொருந்துமோ வெனமதித் திடலுக், தகவுடைச் சமைவுஞ் சாந்தியு முத்தி சாதந மென்பர்தக் கோரே.

(இ - ள்.) திகழும் - விளங்காநின்ற, நல் - உயர்வினை யுடைய, குரவன் - ஆசாரியரது, திரு உளம் - கருத்தினை, பார்த்து - உணர்ந்து, செய்யும் - இயற்றுகின்ற, ஏவல் - பணிவிடையின், சிறப்பதுவும் - உயர்ச்சியும், மகிழும் - சந்தோஷத்தினை யடைக்கிருக்

கின்ற, நல் - நல்ல, குரவன் - ஆசாரியர், மருவும் - பொருந்தி யிருக்கின்ற, நல் - உயர்ந்த, பதி - ஊரை, மன்னி - (பொருந்தி) நிலைத்திருந்து, நீங்காத - (விட்டுப்) போகாத, வாதனையும் - சமஸ்காரமும், புகழும் - துதிக்கின்ற, நல் - நல்ல, பொருந்தும் - (சம்பந்தித்து) வருகின்ற, தமரும் - சுற்றமும், பொன்முதல் - ஸ்வர்ணாதி, பொருளும் - வஸ்துக்களும், நோய் - துன்பந்தருவதாம், என - என்ற, மதித்திடலும் - கருதுதலும், தகவு உடை - தகுதியான, சமைவும் - பொறுமையும், சாந்தியும் - (சித்த) சாந்தியும், தக்கோர் - (ஆகிய இவ்வைந்தினையும்) பெரியோர், முத்தி - மோக்ஷத்திற்கு, சாதனம் - சாதனமாம், என்பர் - என்று கூறுவர், (எ - று) இசை. (13)



போதாமிர்தம்.

**14 முடிகவித் துலகா டிருவிகழ்ந் திறைவன் மொய்கழல் சூடுநற் றிருவும், படிதனக் கேவல் செய்பதமிகழ்ந்து பரமனுக் கேவல்செய் பதமு, மடையுநற் சுவைக ளனைத்தையு மிகழ்ந்திங் கமலனற் சேடமா ருதலு, மிடையறத் திகழு முத்திசா தநமென் றிசைத்திடு மெலையிலா ரணமே.**

(இ - ள்.) முடி - (நவ ரத்ந கசிதமான) கிரீடத்தினை, கவி - தது - தாரணை செய்துகொண்டு, உலகு - (பஞ்சாசட் கோடி) பூமண்டலத்தினையும், ஆள் - (அரசு) ஆக்ஷி செய்யும்படியான, திரு - ஐஶ்வரியங்கள் அனைத்தையும், இகழ்ந்து - (நஶ்வரம் எனக் கருதி) விட்டு, இறைவன் - பரமேசுவரனது, மொய் - வண்டுகள் சூழ்ந் திருக்கின்ற, கழல் - (வீர கண்டை அணிந்த) திரு அடித்தாமரையினை, சூடும் - (சிரசில்) தரித்துக்கொள்ளும்படியான, நல் - உயர்ந்த - திருவும் - ஐஶ்வரியப் பிராப்தியும், படிதனக்கு - பூலோகத்தில் உள்ள மனிதர்கட்கு, ஏவல் - அடிமைத் தொழில், செய் - செய்கின்ற, பதம் - பதவியினை, இகழ்ந்து - (துச்சம் எனக் கருதி) விட்டு, பரமனுக்கு - பரமேஶ்வரனுக்கு, ஏவல் - பணிவிடைகளை, செய் - செய்கின்ற, பதமும் - பதவியும், அடையும் - (கருமாதீநமாக வந்து) பொருந்துகின்ற, நல் - உயர்ந்த, சுவைகள் - ஷட்ரச முடைய பதார்த்தங்கள், அனைத்தையும் - யாவற்றையும், இகழ்ந்து - (தோஷத்தினை

உணர்ந்து) விட்டு, இங்கு - இவ்விடத்து, அமலன் - நின்மலமான ஆசாரியரது, நல்-உயர்ந்த, சேடம்-உச்சிஷ்டத்தினை, ஆருதலும் - அருந்து தலும், இடை அற - (ஆகிய இம் மூன்றினையும்) சதாகால மும், திகழும்-விளங்காநின்ற, முத்தி - மோக்ஷ, சாதநம் - சாதநமாம், என்று - என, எலே இல் - அநாதியான, ஆரணம் - வேதம், இசைத் திடும் - கூறுநிற்கும், (எ - று.) 'படி தனக்கு' என்பதில் 'தன்' எ அசை. (14)

மூல சித்தி.

**15. துரிசினற் பாரம் பரியமா முறையிற் றுகளற வழுவி லாத் துணிவும், பரிவுறக் குரவன் பாதமே நோக்கிப் பழு தறப் புகழுபண் பதுவு, மரியநற் குரவ னருளறம் பொரு ளோ டின்பம்வீ டென்னுமாண் மையதுந்,தெரிவுறத் திகழு முத்திசா தநமாய்ச்செப்புவர் தெய்வஞா நிகளே.**

(இ - ள்.) துரிசு இல் - குற்றம் அற்ற,நல் - நல்ல, பாரம்பரியம் ஆம் - பரம்பரையில் வந்ததாகிய, முறையில் - கிரமத்தில், துகள் அற - குற்றம் இன்றிய, வழுவுஇலா - நழுவுத லில்லாத, துணிவும்- நிச்சய புத்தியும், பரிவு உற - விருப்பத்தோடு, குரவன் - ஆசாரிய ரது, பாதமே - திரு அடிகளையே, நோக்கி - ஸ்மரித்து, பழுது அற - குற்றம் அற்று, புகழு - துதிக்கின்ற, பண்பதுவும் - தன்மையும், அரிய - அருமையான, நல் - உயர்ந்த, குரவன் - ஆசாரியரது, அருள்-காருண்யமே, அறம் - தர்மம், பொருள் - அர்த்தம், இன்பம்- காமம், வீடு-மோக்ஷம், என்னும்-(ஆகிய நான்குமாம்) எனக் கருதும், ஆண்மையதும் - புருஷத்துவமும், தெரிவு உற - (ஆகிய மூன்றி னையும்) ஞானத்தோடு கூடி, திகழும்-விளங்காநின்ற. முத்தி-மோக்ஷத் திற்கு, சாதநம் ஆய் - சாதநமாக, தெய்வ-தேவத் தன்மையினை உடைய, ஞாநிகள்-பெரியோர்கள், செப்புவர்-கூறுவார்கள்,(எ - று.) 'பண்பதுவும்' 'ஆண்மையதும்' என்பவற்றில்'அது'பகுதிப் பொருள் விகுதி, ஒடு எண்ணிடைச் சொல், எ அசை. (15)

சோரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை. 12—16.)

**16.** நேச நெஞ்சினுற் றனக்கது நினைவல வாயினு நெறியென்றே, தேசி கன்றிரு வுள்ளமே செய்குவான் செனித்திடுங் குலத்துக்கு, மாச தாகினு மாச்சிர மத்திலே வழுவினு முலகெல்லா, மேசி வீடினு மறம்புகழ் தநம்பிற விழப்பினு மிடரேனும்.

(இ - ள்.) அது - ஆசாரியர் கூறியது, தனக்கு - மாணுக்கனுக்கு, நினைவு அல ஆயினும் - அநிஷ்டமாக இருப்பினும், நேச-(குருவின் இஷ்டத்தினைச் செய்பவன் மேலான மோக்ஷத்தினை அடைகின்ருன் என உணர்ந்து) விருப்பத்தோடு கூடிய, நெஞ்சினுல் - மநத்தினுல், நெறி - முறைமையாம், என்று - எனக் கருதி, தேசிகன் - ஆசாரியரது, திரு உள்ளமே - இஷ்டப்படியே, செய்குவான் - செய்து முடிப்பான், செநித்திடும் - (தான்)பிறந்திருக்கும், குலத்துக்கு - ஜாதிக்கு, மாசது ஆகினும் - குற்றம் வரினும், ஆச்சிரமத்திலே - (தனது) ஆசிரமத்தில், வழுவினும் - நழுவினும், உலகு எல்லாம் - லோகத்தார் எல்லாரும், ஏசிவிடினும் - நிக்திக்கினும், அறம்-தர்மமும், புகழ் - கீர்த்தியும், தநம் - தநமும், பிற - இன்னும் ஏனைய வற்றையும், இழப்பினும் - இழந்துவிடினும், இடரேனும் - துக்கமும் (சுகமும் வரினும் அவற்றினைக் கவனியாது குருவின் இஷ்டத்தினைச் செய்து முடிப்பான் மாணுக்கன்.),(எ - று.) ஏ-அசை.

மூல சுலோகத்தில் 12-வது அத்தியாயத்தில் 30 - 31-32 - 33 நான்கு சுலோக அர்த்தமும் இதில் அடங்கியிருக்கிறது. (16)

"ஏசிவிடினும்" என்பது "ஏசிவீடினும்" என நீண்டது.

போத ரத்நாகரம்.

**17.** என்ற னக்கிது வாய்த்தவா றறிகிலே னெம்பிரான் கழற்கேவ, றன்ற னக்குநா னுரிது தகுவதோ தமியனேற் கென்றென்று, சென்று றப்பெரு மார்வமு மச்சமுஞ்

**செறிதர வடிமைக்க, ணின்றி யற்றிய தேவலி னியல்பென நிகழ்மறை சொலுமைந்தா.**

(இ - ள்.) மைந்தா - குழந்தாய், என் தனக்கு - நமக்கு, இது - குரு பணிவிடை, வாய்த்த - கிடைத்த, ஆறு - வழியினை, அறிகிலேன் - உணர்ந்திலேன், எம் - எமது, பிரான் - (தலைவராகிய) ஆசாரியரது, கழற்கு - திரு அடிகளுக்கு, ஏவல் தன் தனக்கு - (செய்யப்பட்ட) பணிவிடைகளுக்கு, நான் - யான், ஆர் - யார், இது - குரு கைங்கர்யம், தமியனேற்கு-நமக்கு, தகுவதோ - தகுதியாமோ, என்று என்று-எனக் கருதி, சென்று உற - போய், பெரும்-பெரிய, ஆர்வமும் - ராகமும், அச்சமும் - பயமும், செறிதர - பொருந்தும்படி, அடிமைக்கண் - அடியேனிடத்தில், நின்று - இருந்து, ஏவலின்-பணிவிடையின், இயல்பு-தன்மை, இயற்றியது - செய்தது, என - என்று, நிகழ் - விளங்காநின்ற, மறை - வேதம், சொலும் - கூறும், (எ - று.) (17)

'என் தனக்கு' 'ஏவல் தன் தனக்கு' என்பதில் தன் மூன்றும் அசை.

18. **நிறம்பெற நீரா டாமுன்னீ ராட னின்றிட விருத்தல்தான் கிடத்த, லுறங்குமுன் னுறங்க லுண்ணுமுன் னுண்ட லுரையென லுரையாமல லுரைத்த, லறம்பழி யெவர்க்குங் கூறுத லருளா ததுசெய்த லருளிய பணியை, மறந்தன னென்றல் குருவலாற் றெய்வ மதித்தல் செய் பவன்மக னல்லன்.**

(இ - ள்.) நிறம்-தெய்வத் தன்மையை, பெற-பொருந்திய, நீர்-(நதி) ஜலத்தில், ஆடா (குரு) ஸ்நானம் செய்வதற்கு, முன் - முன்னர், நீர் - தான் (நதி) ஜலத்தில், ஆடல் - ஸ்நானம் செய்தலும், நின்றிட - (ஆசாரியர்) நிற்க, தான் - தான், இருத்தல் - உட்கார்ந்திருத்தலும், கிடத்தல் - (தான்) படுத்துக்கொள்ளுதலும், உறங்கு - (குரு) நித்திரை செய்வதற்கு, முன் - முன்னர், உறங்கல் - (தான்) நித்திரை செய்தலும், உண்ணு-(குரு)போஜநம் செய்வதற்கு, முன் - முன்னர், உண்டல் - (தான்) போஜநம் செய்தலும், உரை - சொல்,

எனல் - என்று, உரையாமல்-(குரு) சொல்லாதிருக்க, உரைத்தல் - (தான்) சொல்லுதலும், அறம் - (குருவினது) தர்மத்தினையும், பழி - நிந்தையினையும், எவர்க்கும் - (உலகத்திலுள்ள) சகல ஜநங்கட்கும், கூறுதல் - சொல்லுதலும், அருளாதது - (குரு) ஆஞ்ஞாபிக்காதவற்றை, செய்தல் - செய்தலும், அருளிய - (குரு) ஆஞ்ஞாபித்த, பணியை-கைங்கர்யங்களை, மறந்தனன்-மறந்துவிட்டேன், என்றல் - எனக் கூறுதலும், குரு அலால்-குருவை விட்டு, தெய்வம் - (வேறு) தேவதைகளை, மதித்தல் - (சரணாகதியாக) நம்புதலும், செய்பவன்- (ஆகிய இப் பத்தினையும்) இயற்றுபவன், மகன் - மாணாக்கன், அல்லன் - ஆகான், (எ - று.) (18)

## போதாமிர்தம்.

19. அருளறமங் கறைந்திடுத லறமலா துரைத்த
லறைபொழுதி லிடையுரைத்த லகங்கரித்தங் குரைத்தல்,
பொருளறிவு தானுரைத்தல் பொருளல்லா துரைத்தல்
புன்கோட்டி கொண்டுரைத்தல் பொடிவனவங் குரைத்த,
லிருளுறுமச் செவிசொல்லலேவலிசைத் திடுத லிடமறியா
திறையருளிச் செயவுரைத்தல் வினவல், தெருளுறுநற்
குருகீர்த்தி யல்லதுபா டிடுதல் தேசிகன்றன் சந்நதியிற்
றீரவிடு மிவையே.

(இ - ள்). அங்கு - குரு சந்நதியில், அருள் - (ஜீவ) காருண்யத்தினையும், அறம் - தர்மத்தினையும், அறைந்திடுதல் - கூறுதலும், அறம் அலாது - தர்மம் அல்லாதவற்றை, உரைத்தல் - கூறுதலும், அறைபொழுதில் - (குரு) உபதேசிக்கும் காலத்தில், இடை - மத்தியில், உரைத்தல் - கூறுதலும், அங்கு - குரு சந்நதியில், அகங்கரித்து - (தன்னைப் பெரியவனாகக் கருதிக்) கெர்வித்து, உரைத்தல் - கூறுதலும், பொருள் அறிவு - அர்த்த ஞாநத்தினை, தான் - (குருவுக்கு) தான், உரைத்தல் - கூறுதலும், பொருள் அல்லாது - அர்த்தம் இல்லாதவற்றை, உரைத்தல் - (குரு சந்நதியில் தான்) கூறுதலும், புன் - இழிவான, கோட்டி - கொள்கையினை, கொண்டு -

கொண்டு, உரைத்தல் - கூறுதலும், அங்கு - குருசந்நதியில், பொடி வன - நிலைநில்லாத வார்த்தைகளை, உரைத்தல் - கூறுதலும், இருள் உறு - பாபம் பொருந்திய வார்த்தைகளை, அச்செவி - குரு காதில், சொல்லல் - கூறுதலும், ஏவல் - (குருவினை) கைங்கர்யம் செய்யும் படி, இசைத்திடுதல் - கூறுதலும், இடம் - சமயம், அறியாது - தெரியாது, இறை - குருவை, அருளிச்செய - அநுக்கிரகம் செய்ய, உரைத்தல் - கூறுதலும், வினவல் - கேட்டலும், தெருள் உறு - ஞானத்தினையுடைய, நல் - உயர்ந்த, குரு - ஆசாரியரது, கீர்த்தி - (பெருமையினைக்) கீர்த்திப்பதனை, அல்லது - (விட்டு விட்டு) மற்றவற்றை, பாடிடுதல் - கீர்த்தித்தலும், இவை - (ஆகிய) இப் பதின் மூன்றும், தேசிகன் - ஆசாரியரது, சந்நதியில் - சந்நிதா நத்தில், தீர - அத்தியந்தம், விடும் - விடத்தக்கனவாம், (எ - று.) தன் தான் ஏ அசை. (19)

போதாமிர்தம்.

20. வெஞ்சொலுங் கடுஞ்சொலும் விரைந்த சொல்லதும்
வஞ்சமும் பழுதுடன் மாறு கூறலும்
பஞ்சிடு முலகியல் பயனில் வாசகந்
தஞ்சநா யகன்றன்முன் றவிர வேண்டுமால்.

(இ - ள்.) வெம் - உஷ்ண, சொலும் - வார்த்தையும், கடும் - கடுமையான, சொலும் - வார்த்தையும், விரைந்த - விரைவான, சொல்லதும் - வார்த்தையும், வஞ்சமும் - வஞ்சக வார்த்தையும், பழுது உடன் - குற்றம் கூறுதலும், மாறு - விரோத வார்த்தைகளை, கூறலும் - சொல்லுதலும், பஞ்சிடும் - நாசம் ஆகாநின்ற, உலகு - இவ்வுலகத்தின், இயல் - தன்மையினை(க் கூறுதலும்), பயன் இல் - பிரயோஜநம் இன்றிய, வாசகம் - சொல்லை(ச் சொல்லுதலும்), தஞ்சம் - (ஆகிய இவ் வெட்டினையும்) சரணாகதியாக அடைந்த, நாயகன் - ஆசாரியரது, முன் - சந்நதியில், தவிர வேண்டும் - (அத்தியந்தம் செய்யாதிருக்கும்படி மாணாக்கன்) நீக்கிக் கொள்ளவேண்டும், (எ - று.) தன் ஆல் அசை. (20)

போத சித்தி.

**21. ஆதநஞ் சயநம் வாகந மிதியடி யத்திரங் குடையொடா பரண, மீதுவண் டயிலங் குளியொடு பூச் சந் தநமுதன் மேவியங் கிடுத, லோதுபல் லுருஞ்ச லொண்பதம் விளக்க லுரைத்தவெற் றிலைதின லிவைதா, ஞுதிநன் குரவ னரியசந் நதியி லடியவ ரறவிடுந் தொழிலே.**

(இ - ள்.) ஆதநம் - ஆசநம், சயநம் - படுக்கை, வாகநம் - வாஹநம், மிதி அடி - பாத ரக்ஷை, அத்திரம் - பாணம், குடை - குடை, ஆபரணம் - பணி, மீது - (சரீரத்தின்) மீது, வண் - வளமையான, தயிலம் - தைலம், குளி - குளித்தல், பூ - புஷ்பம், சந்தநம் - சந்தநம், முதல் - முதலியன, மேவு - (பத்தும்) பொருந்தும்படியாக, இயங்கிடுதல் - (குரு சந்நதியில்) விளங்குதலும், ஒது - சொல்லாநின்ற, பல் - பல்லை, உருஞ்சல் - உருஞ்சுதலும், ஒண் - ஒள்ளிய, பதம் - காலை, விளக்கல் - (குரு சந்நதியில்) கழுவுதலும், உரைத்த - சொல்லாநின்ற, வெற்றிலை - தாம்பூலத்தினை, தினல் - போட்டுக் கொள்ளுதலும், இவை ஆதி - (ஆகிய) இவை முதலிய மூன்று, தொழில் - கிரியைகளையும், நல் - நல்ல, குரவன் - ஆசாரியாது, அரிய - அருமையான, சந்நதியில் - சந்நிதாநத்தில், அடியவர்-மாணுக்கர், அற - அத்தியந்தம், விடும் - விடத்தக்கவர் ஆவார், (எ - று.) ஒடு தான் எ அசை. (21)

மெய்ந் நெறி விளக்கம்.

**22. இறைவன்முன் பசிங்கித மாகவந் திடுத லிட் டவே டத்திநோ டணைதல், கறையுறுஞ் சாயை யிறைவன் மேற் படுதல் கடவுளி னிழறன்மேற் படுத, லுறைதரு தலத்தின் மேலிருந் திடுத லுளமுக முகுளமா யிருத்த, லறைதரு மமல னரியசந் நதியி லடியவ ரறவிடுந் தொழிலே.**

(இ - ள்-) இறைவன் - ஆசாரியாது, முன்பு-சந்நதியில், அசிங்கிதம் ஆக - சுத்தம் இன்றி, வந்திடுதல் - போதலும், இட்ட - தரித்

திருக்கப்பட்ட, வேடத்திஞேடு - வேஷத்தோடு, அணைதல் - கூடுத லும், சறை - குற்றம், உறும் - பொருந்தியிருக்கின்ற, சாயை - (தனது) நிழல், இறைவன் - ஆசாரியரது, மேல் - மீது, படுதல் - பொருந்துதலும், கடவுளின் - ஆசாரியாது, நிழல் - சாயை, தன் - மாணுக்கனது, மேல் - மேலில், படுதல் - பொருந்துதலும், உறை தரு - (ஆசாரியர்) இருக்கின்ற, தலத்தின்மேல் - இடத்தின்மீது, இருந்திடுதல் - (தான்) இருத்தலும், உள்ம் - மநமும், முகம் - முக மும், முகுளம் ஆய் - சந்தோஷமாக, இருத்தல் - இருத்தலும், தொழில் - (ஆகிய அறுவிதக்) கிரியைகளையும், அறைதரும் - (வேதம்) கோஷிக்கின்ற, அமலன் - நின்மல (ஆசாரிய)ரது, அரிய - அருமையான, சந்நதியில் - சந்நிதாநத்தில், அடியவர் - மாணுக்கர், அற - அத்தியந்தம், விடும் - விடத்தக்கவர் ஆவார், (எ - று). ஏ அசை. (22)

ஞாந சித்தி.

**23. போற்றுகை தவிர்த ஞதன் பொருளினைப் புசித்த லீதல், தூற்றுத ஜேடங் தன்னைச் சொன்னவை மறுத்தல் பொய்கள், சாற்றுதல் குலமுங் கல்வி தநத்தபி மாநம் பண்ணன், மாற்றுதல் கொடுத்த றன்னை மற்றிவை குருவோ டாகா.**

(இ - ள்.) போற்றுகை (ஆசாரியரை) தோத்திரம், தவிர்தல் - செய்யாதிருத்தலும், நாதன் - ஆசாரியாது, பொருளினை - திரவியத் தினை, புசித்தல் - சாப்பிடுதலும், ஈதல் - (ஆசாரியரது திரவியத் தினை) தாநம் கொடுத்தலும், தோடம்தன்னை - (ஆசாரியரது) தோஷத்தினை, தூற்றுதல் - பலர் அறியச் சொல்லுதலும், சொன் னவை - (குரு) ஆஞ்ஞையினை, மறுத்தல் - மறுதலித்தலும், பொய் கள் - (குருவினிடத்தில்) பொய்வார்த்தைகளை, சாற்றுதல் - சொல் லுதலும், குலமும் - (மாணுக்கன் தனது) குலத்தினிடத்தும், கல்வி - வித்தையினிடத்தும், தநத்து - திரவியத்தினிடத்தும், அபிமாநம் - அபிமாநம், பண்ணல் - செய்தலும், மாற்றுதல் - (ஒன்றை) வாங்குத லும், கொடுத்தல் - (ஒன்றைக்) கொடுத்தலும், இவை-(ஆகிய) இவ்

வொன்பதவித விவகாரங்களும், குருவோடு - ஆசாரியரிடத்தில், ஆகா - (மாணுக்கன் வைத்துக்கொள்ளல்) தகுதி யன்று, (எ - று). 'தோடம் தன்னை' என்பதில் 'தன்' 'தன் ஐ மற்று' அசை. (23)

தத்துவ சரிதை.

**24. நீரிடத் தினுநிசி யிருளி டத்தினு நெறிகணிற் பயமுறு மிடத்துஞ், சீரருட் குரவன் முன்புசே விப்பான் றிகழ்ந்தமற் றுளநெறி யவற்றிற், பேரருட் குரவன் பின்புசே விப்பான் பிறிதொரு சிந்தையற் றிறைவ, ஞர் திருக் கழலிற் சாயைபோன் முன்பின் னுய்விடா ரன்பி னுத் தமரே.**

(இ - ள்.) நீரிடத்தினும் - ஜலத்தில் இறங்கும்போதும், நிசி இருளிடத்தினும் - அத்தியந்தம் இருட்டுக் காலத்திலும், நெறிகணில் - மார்க்கங்களில், பயம் - பயத்தினை, உறுமிடத்தும் - பொருந்துகிற காலத்தும், சீர் - சிறப்பினையுடைய, அருள் - ஞாந, குரவன் - ஆசாரியருக்கு, முன்பு - முன்னர், சேவிப்பான் - (மாணுக்கன்) போவான், திகழ்ந்த - விளங்காநின்ற, மற்று - (கூறியவற்றிற்கு) அந்நியமாக, உள - உள்ள, நெறி அவற்றில் - மார்க்கங்களில், பேர்-மிகுந்த, அருள் - அருளினையுடைய, குரவன்-ஆசாரியருக்கு, பின்பு-பின்னர், சேவிப்பான் - (மாணுக்கன்) போவான், பிறிது - வேறு, ஒரு சிந்தை - ஒரு சிந்தையும், அற்று - இன்றி, இறைவனுர் - ஆசாரியரது, திரு - அழகிய, கழலில் - திரு அடிகளில், சாயை - (தனது தேகத்தின்) நிழல், போல் - போல, முன் - (சிலவிடத்து) முன்னுமாயும், பின் ஆய் - (சில இடத்துப்) பின்னுமாயும் இருந்து, உத்தமர் - உயர்வுடைய (மாணுக்க)ர்கள், அன்பின் - பக்தியினுல், விடார் - விட்டு நீங்கார், (எ - று). (24)

மூல சித்தி.

**25. தன்னு ளத்தெழு நீங்குத ஞயகன்**
**முன்னு ரைத்தினி மேன்மூளை யாவகை**

சொன்ன வப்பரி சேசுட வேண்டலா
லன்ன வப்பதி விட்டகல் வானலன்.

(இ - ள்.) தன் - (மாணாக்கன்) தனது, உளத்து - மநத்தின் கண், எழு - உண்டாகின்ற, தீங்கு - குற்றங்களை, தன் - தனது, நாயகன் - ஆசாரியரது, முன் - சந்நதியில், உரைத்து - கூறி, இனிமேல் - இன்னும், முளையாவகை - (தீங்குகள்) உண்டாகாதபடி, சொன்ன - (குரு) உபதேசித்த, அப்பரிசே - அந்தக் கிரமமாகவே, சுடவேண்டலால் - தகித்தல் செய்ய வேண்டியிருத்தலினால், அன்ன - ஆசாரியர் இருக்கும், அப்பதி - அவ்வூரை, விட்டு - விட்டு, அகல்வான் - நீங்குபவன், அலன் - ஆகான், (ஆசாரியர் வசிக்கும் ஊரை விட்டு நீங்காது தேகச் சாயை போல் மாணாக்கன் இருக்க வேண்டும் என்றபடி). எ - று. (25)

சமயாசாரம்.

26. தநமாக் காய முயிர்மூன்றுந் தலைவற் கீந்தங் கிவைகெடினு, மநவாக் காய கன்மத்தால் வணக்கங் கெடாத மநத்தராய், நினைவாக் காய மட்டாங்க நேர்பஞ் சாங்க சிட்டாங்க, மெனநால் வணக்கஞ் சிராங்கமுட னிறையாற் பிறவி யறுவோர்க்கே.

(இ - ள்.) தலைவர்க்கு - குருவுக்கு, தநம் - தநம், மாக்காயம் - தூல சரீரம், உயிர் - பிராணன், மூன்றும் - (ஆகிய) மூன்றினையும், ஈந்து - தத்தம் செய்து, இவை - இம் மூன்றும், கெடினும் - நாசம் உறினும், மந - மநம், வாக் - வாக்கு, காய - சரீரத்தின், கன்மத்தால் - கிரியைகளினால், வணக்கம் - நமஸ்காரம் முதலியன, கெடாத - செய்யும், மநத்தராய் - மநத்தினை யுடையவர்களாய், நினை - மநம், வாக் - வாக்கு, காயம் - சரீரங்களினால், அட்டாங்கம் - அஷ்டாங்கமும், நேர் - ஒழுங்கான, பஞ்சாங்கம் - பஞ்சாங்கமும், சிட்டாங்கம் - திரியங்கமும், சிராங்கம் - சிராங்கமும், என - என்று, நால் - நான்குவிதமான, வணக்கம் - நமஸ்காரம், இறையால் - குருவினால்,

 

பிறவி - ஜநந (மரண ரூப சம்சாரத்தினை), அறுவோர்க்கு - நிவர்த்தி செய்து கொள்ளுவோராகிய மாணுக்கர்கள் செய்வோராவர். (எ-று).

அங்கு உடன் ஏ - அசை.

தலை இரு கரம் இரு கன்னம் முகவாய் இரு புயம் ஆகிய இவை அஷ்ட அங்கமாம். தலை இருகரம் இரு முழந்தாள் ஆகிய இவை பஞ்ச அங்கமாம். தலை இருகரம் ஆகிய இவை திரி அங்கமாம். தலை சிரஅங்கமாம் என நான்குவித நமஸ்காரத்தினை உணர்க. இதற்கு உதாரணம் சிவ தருமோத்திரம் "வலஞ்செய்து தண்டதனை மானவிதி முறைதழுவத், தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னந், துலங்குமுகவாய்புயங்க ளெனுமெட்டுந் தோயமயி, ரிலங்குசிரங் காமுழந்தா ளெனுமைந்து மிலங்குறவே." என மற்றும் வருவனவற்றுற் காண்க. (26)

மூல சித்தி.

27. சென்றபோ திறைவன் றிருவடித் தலத்தே
சிறந்தபஞ் சாங்கவட் டாங்க, மொன்றவே வணங்கி யொப்
பிலா னருளை யுளமது நிறையவே பருகிப், பின்னரப் பரிசே
விடைகொளும் பொழுதும் வணங்குக பெரியவன் முகப்பே,
நின்றுநெக் குருகித் தன்றன்வா யாரத் துதிப்பது நீதியன்
பருக்கே.

(இ - ள்.) சென்ற - மாணுக்கன் (குரு சந்நிதியில்) போன, போது - காலத்து, இறைவன் - ஆசாரியரது, திரு அடிதலத்து - அழகிய பாதங்களுக்கு, சிறந்த - (மோக்ஷ) ஹேதுவான, பஞ்சாங்க - ஐந்து அவயவங்களும், அட்ட அங்கம் - எட்டு அவயவங்களும், ஒன்ற - (பூமியில்) பொருந்தும்படி, வணங்கி - (பஞ்சாங்க அஷ்டாங்க) நமஸ்காரங்களைச் செய்து, ஒப்பு இலான் - உவமித்தற்கு (உலகத்தில் ஈசுவர சிருஷ்டியில் ஒரு பதார்த்தமும்) இல்லாத ஆசாரியரது, அருளை - அநுக்கிரகத்தினை, உளமது - மநத்தின்கண், நிறைய - பூரணமாக, பருகி - குடித்து (பெற்று என்றபடி), பின்னர் - பின், விடை - போகும்படியான ஆஜ்ஞையினை, கொளும் -

(குருவினிடம் இருந்து பெற்றுக்) கொள்ளுகிற, பொழுதும் - சமயத்திலும், அப்பரிசே - முன் போன்றே, வணங்குக - (அஷ்டாங்க பஞ்சாங்க) நமஸ்காரங்களைச் செய்க, அன்பருக்கு - மாணாக்கர்கட்கு, பெரியவன் - குருவினது, முகப்பே - சந்நதியில், நின்று - நின்று, நெக்கு - (மநம்) நெழ்ச்சியடையும்படியாக, உருகி - உருக்கம் உற்று, தன் தன் - தம் தமது, வாய் - வாக்கினால், ஆர - (சகல குணங்களும்) பொருந்தும்படி, துதிப்பது - தோத்திரம் செய்வது, நீதி - முறைமையாம், (எ - று). எ எ எ எ - அசை. (27)

## மெய்ந் நெறி விளக்கம்.

**28.** குரவனுர் தீர்த்து மொழிவன வெல்லாங் குருதரமாகவோ திடுகத், தெரியுமா றரிய ஞாநகோ சத்தைத் தெரிந்திடி னெடுத்தவிழ்த் திறைமு, னரியவா தநத்தில் வைத்திறை யருட்டாள் வணங்கியங் கதன்பயன் கேட்டாங், குரியகோ சத்தைக் கட்டிநா யகன்றா ளொப்பற வணங்குத லொழுக்கே.

(இ - ள்.) குரவனுர் - ஆசாரியர், தீர்த்து - (சந்தேக விபரீதங்கள் ஒழியும்படி) நிச்சயித்து, மொழிவன - உபதேசிப்பன, எல்லாம் - யாவையும், குருதரமாக - குருவினிடமாகவே, ஓதிடுக-படிப்பாயாக, தெரிந்திடின் - (விசாரித்துப்) பார்க்குமிடத்து, தெரியும் - (பொருள்) விளங்கும், ஆறு - முறைமையாக, அரிய - அருமையான, ஞாந கோசத்தை - ஞாந சாஸ்திரத்தினை, எடுத்து - எடுத்து, அவிழ்த்து - அவிழ்த்து, இறை - குருவின், முன் - முன்னர், அரிய - அருமையான, ஆதநத்தில் - ஆசநத்தில், வைத்து-வைத்து, இறை - ஆசாரியரது, அருள் - கிருபையினையுடைய, தாள் - திருவடிகளை, வணங்கி - (அஷ்டாங்க) நமஸ்காரம் செய்து, அதன் - அந்நூலினது, பயன் - பிரயோஜநத்தினை, கேட்டு - சிரவணம் செய்து, உரிய - (தனக்கு) உரித்தாயுள்ள, கோசத்தை - சாஸ்திரத்தினை, கட்டி - கட்டி (வைத்துக்கொண்டு), நாயகன் - ஆசாரியரது, தாள் -

திருவடிகளில், ஒப்பு அற - உவமையின்றி, வணங்குதல் - நமஸ்கரித்தல், ஒழுக்கு - முறைமையாம், (எ - று). (28)

அங்கு ஆங்கு ஏ - அசை.

## தத்துவ போதம்.

**29. எப்படிக் கீழா மவர்களே யெனினு மிறையுளத் தடைத்தவர் தம்மை, யப்பரம் பரம னென்றுளத் துணர்க வயன்முதன் மூவரே யெனினு, மெய்ப்பட விறைவன் றிருவுள மிலதேன் மீண்டுபா ராதுகை விடுக, செப்பிட விறைவன் றிருவரு ணிறைந்த சீடரா சாரனன் கிதுவே.**

(இ - ள்.) எப்படி - எவ்வித, கீழாமவர்களே - தாழ்வாகியவர்கள், எனினும் - ஆயினும், இறை - ஆசாரியரது, உளத்து - மநத்தின்கண், அடைத்தவர் தம்மை - பொருந்தியவர்களை, அப் பரம்பரமன் - அந்த மேலான பரமேசுவரன், என்று - என, உளத்து - மநத்தின்கண், உணர்க - அறிவாயாக, இறைவன் - ஆசாரியரது, திரு உளம் - திவ்விய அந்தக்கரணம், மெய்ப்பட - உண்மையாக, இலதேல் - இல்லாதிருக்குமாயின், அயன் - பிரஹ்மதேவன், முதல் - முதலிய, மூவரே - மும்மூர்த்திகள், எனினும் - ஆயினும், மீண்டு - மறு முறை, பாராது - (கண்ணால்) பார்க்காது, கைவிடுக - (அத்தியந்தம் விட்டு) விடுவாயாக, செப்பிட - சொல்லுமிடத்து, இறைவன் - குருவினது, திரு அருள் - மிகுந்த அநுக்கிரகம், நிறைந்த - பரிபூரணமான, நன்கு - நல்ல, சீடர் - சிஷ்யர்களின், ஆசாரம் - ஆசாரம், இதுவே - இதுவேயாம், (எ - று.) (29)

'அடைத்தவர் தம்மை' என்பதில் தம் அசை.

## சிவப் பிரகாச தரிசநம்.

**30. இப்பரி சிறைவன் றிருவுளம் பிழையா திலங்கிய வேவலின் வலியா, லெப்பரி சுள்ள சித்திகள் வலிக ளிசைந் திடா நிற்குமங் கவர்பா, லப்பரி செல்லாச் சித்தியும் வந்தா**

**லகந்தையும் வியப்புமே வாமே, தப்பற வெனையா டம்பிரா னேவற் றன்மையென் றருளினைப் பணிவாம்.**

(இ - ள்.) இப்பரிசு - இவ்வாறு, இறைவன் - ஆசாரியாது, திரு உளம்-திருவுள்ளத்திற்கு, பிழையாது-மாறுபாடின்றிச் செய்து, இலங்கிய - விளங்காநின்ற, ஏவலின் - (சதுர்வித) பணிவிடைகளின், வலியால் - சாமர்த்தியத்தினுல், அவர்பால் - அந்தமாணுக்கரிடத்தில், எப்பரிசு உள்ள - எவ்வாருய, சித்திகள் - (அஷ்ட) சித்திகளும், வலிகள் - (சாபாநுக்கிரக) சாமர்த்தியங்களும், இசைந்திடா நிற்கும் - பொருந்தியிருக்கும், அப்பரிசு - அத்தன்மை போல, எல்லாச் சித்தியும் - சர்வ சித்திகளும், வந்தால் - (குரு பணிவிடையினுல் நமக்குக்) கிடைக்குமாயின், அகந்தையும் (அதனுல் நமக்குச் சித்திகள் உண்டாயின என்று கருதி) கர்வத்தினையும், வியப்பும்-(அபக்குவியாகிய நமக்கும் குரு கிருபையினுல் சர்வ சித்திகளும் உண்டாயின என்று) ஆச்சரியத்தினையும், மேவாமே - பொருந்தாமல், எனை-அடியேனை, தப்பு அற - குற்றம் இன்றி, ஆள் - ஆட்கொண்ட, தம்பிரான்-குருமூர்த்தியினது, ஏவல்-பணிவிடைகளின், தன்மை-தர்மமாம், என்று-எனக் கருதி, அருளினை - (குரு) கிருபையினை(க் குறித்து), பணிவாம் - நமஸ்கரிப்பாம், (எ - று.) அங்கு அசை. (30)

சமயாசாரம்.

**31. பெருந்தவ மில்லான் றன்னைப் பேணிய மடைந்தை யுள்ளத், திருந்தவை முடிந்த தென்று லிகபரந் தெரிந்த ஞாநப், பெருந்தவக் குருவைத் தெய்வ மென்று மெய் பேண வல்லார்க், கரும்பொரு ளியாது மில்லை யிருமையு மகலி டத்தே.**

(இ - ள்.) பெரும் - மிகுந்த, தவம் - தவங்கள், இல்லான் தன்னை - (ஒன்றும்) இல்லாத ஒரு புருஷனை, பேணிய - விரும்பிய, மடந்தை - (ஒரு) ஸ்திரீக்கு, உள்ளத்து - (தனது) மநத்தின்கண், இருந்தவை - இருந்த இச்சைகள் யாவும், முடிந்தது - முற்றுப் பெற்றன, என்றால் - எனத் தர்ம சாஸ்திரம் கூறுமாகில், இக-இஹ

லோக பதார்த்தங்களேயும், பரம் - பரலோக பதார்த்தங்களேயும், தெரிந்த - உணர்ந்த, ஞாந - ஞாநத்தோடுகூடிய, பெரும் - மிகுந்த, தவ-தவத்தினே யுடைய, குருவை - ஆசாரியரை, தெய்வம்-(பிரத்தியக்ஷமாக எழுந்தருளி வந்த) ஈசுவரனும், என்று-எனக் கருதி, மெய்-உண்மையாக, பேண - விசுவாசம் செய்ய, வல்லார்க்கு - சாமர்த்தியம் உடைய மாணுக்கர்கட்கு, அகல் - விரிந்த, இருமையும் இடத்து-இகலோக பரலோகங்களில், அரும் - (அடையக் கூடாத) அரிய பொருள் - பதார்த்தங்கள், யாதும் - ஒன்றும், இல்லே - இல்லேயாம் (எல்லாப் பொருளும் அடையப்படும் என்றபடி), (எ - று.)

'இல்லான் தன்னே' என்பதில் 'தன்' ஏ அசை. (31)

ஞாந சாரம்.

**32.** ***சாற்றிய பரிசிற் றவறுத லேவன் மறுத்தலாம் பிழையது சாற்றி, ஞற்றவ் கதனைத் தீர்த்திடற் குபாய மாய்ந்திடத் தொன்றினு லில்லேச். சேற்றினேச் சேற்றுற் கழுவலா யிடுமோ தெளிந்தநீர் கொண்டலா லதுபோ, லாற் றிய விறைவ னருடரு நீரா லப்பிழைச் சேறுநீக் கிடுவான்.***

(இ - ள்.) சாற்றிய - முற் புகன்ற, பரிசில் - தன்மையில், தவறுதல் - தவறு செய்தலாவது, ஏவல் - (குரு) பணியினே, மறுத்தல் ஆம் - (செய்யேன் என்று) மறுத்தலாகிய, பிழையது - குற்றமாம், சாற்றின் - சொல்லுமிடத்து, ஆற்ற - பெரிய, அதனே - அக்குற்றத்தினே, தீர்த்திடற்கு - நிவர்த்திப்பதற்கு, உபாயம் - சாதநம், ஆய்ந்திடத்து - ஆராயுமிடத்தில், ஒன்றினுல் - ஒருவித (உபாய)த்தினுலும், இல்லே - நிவர்த்தியாகாது, தெளிந்த - தெளிவான, நீர் - ஜலத்தினே, கொண்டு - கொண்டு, அல்லால் - (கழுவலாமே) அன்றி, சேற்றினே - சேற்றை, சேற்றுல் - சேற்றினுல், கழுவல் ஆயிடுமோ - கழுவுதல் கூடுமோ, (கூடாது என்றபடி), அது போல் - அதைப் போல, ஆற்றிய-சொல்லாநின்ற, இறைவன்- ஆசாரியாது, அருள்தரும் - ஞாநத்தைக் கொடுக்கின்ற, நீரால் - ஜலத்தினுல், அப்பிழை - (ஆசாரியருக்குச்செய்த) குற்றமாகிய, சேறு - சேற்றினே,

நீக்கிடுவான் - (அந்த மாணாக்கன்) நிவர்த்தித்துக் கொள்ளுவான், (எ - று.)

'பிழையது' என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. அங்கு அசை. (32)

ஞாந சாரம்.

**33. வேற்றுள குற்ற மியாவையுந் தீர்க்கும் விமலமா மிறையரு ளென்று, லாற்றவ ஏ குற்ற பிழையைநீக் குவது மவனரு ளன்றிவே றுண்டோ, போற்றியங் கவன்றன் பொன்னடி பொருந்திப் புநிதபா தோதக மாடி யாற்றவங் கமல னருளினை முழுக்கி லக்கணந் தீருமப் பிழையே**

(இ - ள்.) விமலம் ஆம் - நின்மலமாகிய, இறை - ஆசாரியரது, அருள் - கிருபையானது, வேற்று - (ஆசாரியருக்குச் செய்த குற்றத்தினும்) வேறாக, உள - உள்ள, குற்றம் - குற்றங்கள், யாவையும் - முழுமையும், தீர்க்கும் - நிவர்த்தி செய்யும், என்றால் - எனக்கூறப் படுமாயின், ஆற்ற - உற்ற - (ஆசாரியருக்குச்) செய்யப்பட்ட, பிழையை - குற்றத்தினை, நீக்குவதும் - நிவர்த்திப்பதும், அவன் - அந்த ஞானாசாரியரது, அருள் - கிருபையினை, அன்றி - அன்றி, வேறு - வேறு (சாதநம்), உண்டோ - இருக்கின்றதோ (இல்லை என்றபடி), போற்றி - (ஆசாரியரை மந வாக்குக் காயங்களினால்) துதித்து, அவன் - ஆசாரியரது, பொன் - பொன் (போன்ற), அடி - திரு அடியினை, பொருந்தி - அடைந்து, புநித - பரிசுத்தமான, பாத உதகம் - பாத ஜலத்தினை, ஆடி - ஸ்நாநம் செய்வித்து, ஆற்ற - பெருமையினையுடைய, அமலன் - நின்மல ஆசாரியர், அருளினை - கிருபையினை, முழுக்கில் - மூழ்கச் செய்வாராகில், அக்கணம் - அந்த க்ஷணத்திலேயே, அப்பிழை - அந்தக் குற்றம், தீரும் - நிவர்த்தியாகும், (எ - று.) அங்கு அங்கு தன் அங்கு ஏ அசை. (33)

போத சாரம்.

**34. அறைந்தவப் பரிசப் பிழையினை நீக்கா தவனெறி நிரயம்வீழ்ந் தழியும், பிறந்திடிற் பிரம வரக்கனும் பெரும் பாம் பாமெனப் பெருமறை பேசுஞ், சிறந்தன பிழைதீர்**

**வளவுமங் கவன்றன் றெரிசகம்பரிசகங் தகுமோ, மறந்துமற் றணுகார் மாதவத்தடியா ரணுகில்வன் பாதக மன்றே.**

(இ - ள்.) அறைந்த - முற் புகன்ற, அப்பரிசு - அவ்வாறே, அப்பிழையினை - அக்குற்றத்தினை, நீக்காதவன் - நிவர்த்திசெய்து கொள்ளாத மாணாக்கன், எரி - அக்கினிப் பொறியைக் கக்காநின்ற, நிரயம் - (ரௌரவ) நரகத்தில், வீழ்ந்து - விழுந்து, அழியும்-நாசத் தினை அடைவன், பிறந்திடில் - ஜந்மம் எடுக்கில், பிரம அரக்கன் ஆம் - பிரஹ்மராக்ஷசனாகப் பிறப்பன், பெரும் பாம்பு ஆம் - மலைப் பாம்பாகப் பிறப்பன், என - என்று, பெரும் - விரிந்த, மறை - வேதம், பேசும் - கூறும், சிறந்தன - உயர்வான, பிழை - குற்றங் கள், தீர்வு - நிவர்த்தியாகும், அளவும் - பரியந்தமும், அவன் - அந்த மாணாக்கனை, தெரிசநம் - (கண்ணால்) பார்த்தலும், பரிசம்-(கையால்) தொடுதலும், தகுமோ - கூடுமோ (பார்த்தலும் கூடாது என்றபடி), மாதவத்து - பெரிய தவத்தினையுடைய, அடியார் - சாதுக்கள், மறந் தும்-மறந்தும் கூட, அணுகார்-(அந்தக் குருத் துரோகியாகிய மாணாக் கனை) கிட்டார், அணுகில் - கிட்டில், வன் - வலிய, பாதகம்-பாபம் உளதாம், (எ - று.) அங்கு தன் மற்று அன்று எ அசை. (34)

சோருபாநந்த சித்தி. (பிரஹ்ம கீதை 12—17.)

**35.** தேசி கன்றிரு வுள்ளமுண் டாகவச் சிவன் **றிகழ்ந் திடுகின்றா, னீச னிங்கருள் செய்யவந் திருக்கிற விடமிவன் றிருமேனி, மாசதொன்றிவ னளவிலே செயி லெரி வாய்நர கினிற்பூத, நாச மெவ்வள வவ்வள வுஞ்செல கண்ணுநன் னெறிகண்ணன்.**

(இ - ள்.) தேசிகன் - குரு, திரு உள்ளம் உண்டாக - பிரீதி அடையில், அச் சிவன் - அந்தச் சிவன், திகழ்ந்திடுகின்றான் - பிர சந்நன் ஆகின்றனன், இவன் - குருவினது, திருமேனி - தேகம், ஈசன் - மஹாதேவன், அருள் - அநுக்கிரகம், செய்ய - செய்ய, வந் திருக்கிற - வந்திருக்கிற, இடம் - ஸ்தாநம் ஆம், இவன் - குரு, அள வில் - மாத்திரத்தில், ஒன்று - ஒரு, மாசது - குற்றம், செயில்-செய்

யில், எரிவாய் - அக்கிநிமயமான, நரகினில் - நாகத்தில், பூத - பூதங்கள், நாசம் - அழிவு, எவ்வளவு - எதுவரையோ, அவ்வளவு - அதுவரை, செல - கழியும்படி, நண்ணும் - பொருந்தியிருப்பன், நல் - மோக்ஷ, நெறி - மார்க்கத்தினை, நண்ணன்-பொருந்தான், (எ - று.) இங்கு அசை. இது மூலத்தில் 34 - 35-வது சுலோகங்களின் பொருளாம். 12-வது அத்தியாயம் (35)

சிவாநந்த நிலயம்.

36. குரவ னேகுறி யேதுமி லாச்சிவ
னுரிய சத்தியே யொப்பிலா வம்பிகை
கருது மைந்தரே கந்தர்வி நாயகர்
பெருகு சுற்றமும் பேணுமப் பத்தரே.

(இ - ள்.) குரவனே-ஆசாரியரே, ஏதும் - எவ்வித, குறிஇலா- அடையாளம் இன்றிய, சிவன் - பரமசிவன் ஆவன், உரிய - குருவுக்கு உரித்தா யுள்ள, சத்தியே - மனைவியே, ஒப்பு இலா - சமாநம் இன்றிய, அம்பிகை - அம்பிகையாகும், கருதும் - எண்ணத் தகுந்த, மைந்தரே - புத்திரர்களே, கந்தர் - ஷண்முகக் கடவுளும், விநாயகர் - விக்நேசுவரக் கடவுளும் ஆவர், பெருகு - மிகுந்த, சுற்றமும் - சுற்றத்தார்களே, பேணும் - விரும்பத் தகுந்த, அப்பத்தர் - பரமேசுவரனது பத்தர்கள் ஆவார்கள், (எ - று.) ஏ - அசை. (36)

மெய்ம் மொழி.

37. சற்குரு பரசி வன்ரு னுயினும் வாசி சாற்றிற்
சற்குரு சிவன்கோ பித்தாற் சமிப்பிக்குஞ் சிவனு லென்றுஞ்
சற்குரு கோபந் தன்னைச் சமிப்பிக்க வொண்ணு தத்தாற்
சற்குரு நாதன் பாதந் தப்பிடான் முத்த னன்றே.

(இ - ள்.) சத் குரு - நல்லாசிரியர், பரமசிவன் - பரமசிவமே யாவர், ஆயினும் - (அங்ஙனம்) ஆயினும், வாசி - (இருவருக்கும் உள்ள) வேற்றுமையினை, சாற்றில் - சொல்லுமிடத்து, சிவன் - பரமசிவன், கோபித்தால் - கோபிக்கில், சத் குரு - நல்லாசிரியர்

சமிப்பிக்கும்-(அக்கோபத்தினை) நிவர்த்தி செய்விப்பர், சத் குரு-நல்லாசிரியரது, கோபம்தன்னை - கோபத்தினை, என்றும் - எப்பொழுதும், சிவனால் - பரமசிவத்தால், சமிப்பிக்க - நிவர்த்திக்க, ஒண்ணாது - முடியாது, அத்தான் - அக்காரணத்தினால், சத்குருநாதன் - நல்லாசிரியரது, பாதம் - திருவடியினின்றும், தப்பிடான் - நீங்காதவன், முத்தன் - மோக்ஷம் அடைந்தவன் ஆவன், (எ - று.) தான் "கோபம் தன்னை" என்பதில் தன் அன்று ஏ - அசை. (37)

சோரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை 12 - 18)

**38.** அருவெனு மமலன்ற னருளில னெனினுஞ்சார்
குருபர னருளுண்டே யெனிலொரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுள மிலரென்று
லொருவரு மிலர்கண்டீ ருறுதுயர் களைகின்றார்.

(இ - ள்.) அருவு - சூக்ஷமம், எனும் - ஆகிய, அமலன் - பரமசிவனது, அருள் - அநுக்கிரகம், இலன் - (ஒரு சிஷ்யன்) இல்லாதவனாக, எனினும் - இருப்பினும், சார் - (சரணாகதியாகப்) பொருந்திய, குருபரன்-ஞாநாசிரியரது, அருள்-அநுக்கிரகம், உண்டே-இருக்கும், எனில் - ஆயின், ஒரு குறை-ஒரு குறைவும், உண்டோ-இருக்கின்றதா (இல்லை என்றபடி), திருஅடி - பாத தாமரையினை, தர-தருதற்கு, வந்தார் - எழுந்தருளி வந்த குரு மூர்த்தியினது, திரு உளம் - அநுக்கிரகம், இலர் - (ஒருவருக்கு) இல்லாது, என்றால் - (இருக்கும்) ஆயின், உறு - பொருந்தியிருக்கின்ற, துயர் - துன்பத்தினை, களைகின்றார் - நிவர்த்திப்பவர், ஒருவரும் - எவரும், இலர் - இல்லை. (எ - று.) தான் அசை. கண்டீர் முன்னிலை அசை. இது 36-வது சுலோகப் பொருள். (38)

ரிபு கீதை (42-10.)

**39.** குருபரனே பரமசிவன் பரேசன்றானே குருபரனுமாகினுமே யொருகாலத்தி, னிருமலமாம் பரமசிவன் முனிவுற்றாலு நிகரில்தயா நிதியான குரவன்காப்ப, னருள்

**வடிவே திருவுருவா யெழுந்துநின்ற வாசிரிய னென்றேனு முநிவுற்றுனேற்,றிரிவிதமா முலகத்து மம்மாணுனைத் தியக்க மெலாந் தீர்த்தெவருங் காப்பதில்லை.**

(இ - ள்.) குருபரனே - ஆசாரியரே, பரமசிவன் - ஈஸ்வரனுவர், பரேசன் தானே - ஈஸ்வரனே, குருபரன்ஆம் - ஆசாரியர் அவர். ஆகினும் - (பரஸ்பரம்)பேதம் இன்றியிருப்பினும், ஒரு காலத்தில் - ஒரு சமயத்தில், நிருமலம் ஆம் - நின்மலனுகிய, பரமசிவன் - ஈசுவரன், முநிவு - கோபத்தினை, உற்றுலும் - பொருந்தினுனயினும், நிகர் இல் - சமானரகிதயான, தயாநிதியான - தயாநிதியாகிய, குரவன் - ஆசாரியர், காப்பன் - (நம்மை) ரக்ஷிப்பர், அருள் - ஞான, வடிவே - சொரூபமே, திரு உருவு ஆய் - திவ்வியமங்கள மூர்த்தமாய், எழுந்துநின்ற-எழுந்தருளி வந்த, ஆசிரியன் - ஆசாரியர், என்றேனும் - எப்போதாயினும், முநிவு - கோபத்தினை, உற்றுனேல் - பொருந்தினாராயின், திரிவிதம்ஆம் - ஸ்வர்க்க மத்திய பாதாளமாகிய, உலகத்தும் - உலகத்திலும், அம்மாணுனை - (குருகோபம் உற்ற) அந்தச் சிஷ்யனை, தியக்கம் - மயக்கம், எலாம் - யாவும், தீர்த்து - நிவர்த்தித்து, எவரும் - ஒருவரும், காப்பது - ரக்ஷிப்பது, இல்லை - இல்லையாம், (எ - று.) 'பரேசன்றுனே' என்பதில் தான் அசை. (39)

ரிபு கீதை (42-9.)

40. **தந்தைமுதற் பெந்துவெலா மநந்த தேகந் தருவதலா லநாதிபவ பந்தந் தீர்க்கார், சிந்தையினு லாய்ந்திடலப் பெந்து வெல்லாஞ் சிறுமைதருஞ் சத்துருவே யாகாநிற்ப, ரந்தமிலா வருள்வடிவாங் குருவோ வென்று லகண்டபர ஞானத்தை யருளா னல்கித், தொந்தமதா மநாதிபவ பந்த மெல்லாந் துப்பறவே நன்றுகத் துடைத்துக் காப்பன்.**

(இ - ள்.) தந்தை - பிதா, முதல் - முதலிய, பெந்து - பந்துக்கள், எலாம் - யாவரும், அநந்த - எல்லை யின்றிய, தேகம் - சரீரத்தினை, தருவது - கொடுக்கின்றுர்களே, அலால் - அன்றி, அநாதி - அநேக காலமாகப் பொருந்திய, பவ-சம்சாரத்தினுல் உளவாம், பந்தம்-

கட்டினை, தீர்க்கார் - நிவர்த்திக்கமாட்டார்கள், சிந்தையினல்-மநத்தினல், ஆய்ந்திடில் - விசாரிக்குமிடத்து, அப்பெந்து - அந்தப் பந்துக்கள், எல்லாம் - யாவரும், சிறுமை - (ஜநந மரண ரூப) துக்கத்தினை, தரும் - தருகின்ற, சத்துருவே ஆகாநிற்பர் - சத்துருக்களே யாவார்கள், அந்தம் இலா - நித்திய, அருள் - ஞாந, வடிவு ஆம் - ஸ்வரூபியாகிய, குருவோ - ஆசாரியரோ, என்ருல் - எனின், அருளால் - கருணையினல், அகண்ட - பிரஹ்ம, பாஞாநத்தை - அபரோக்ஷ ஞாநத்தினை, நல்கி - (சிஷ்யனுக்குக்) கொடுத்து, தொந்தமது ஆம் - துவந்துவங்களாகிய, அநாதி - அநாதி (கால), பவ - சம்சார, பந்தம் - கட்டு, எலாம் - யாவையும், துப்பு அறவே - அத்தியந்தம், நன்ருக - சேஷம் இன்றி, துடைத்து - நிவர்த்தித்து, காப்பன் - ரக்ஷிப்பர், (எ - று.) (40)

சோரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை 12-20.)

41. இந்தவி டும்பையு டம்புறு மேது
தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோர்
அந்தமி லாதவ கண்டமு நம்முட்
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்ருர்.

(இ - ள்.) அந்தம் - நாசம், இலாத - இன்றிய, அகண்டம் - ஆத்மாவை, நம்முள் - நமக்கு, தந்தவர் - உபதேச வாயிலாய்க் கொடுத்தவர், தந்தை - குரு, என - என்று, சமைவுற்ருர் - கூறப்படுகின்ருர், இந்த - பிரத்தியக்ஷமாக, இடும்பை - துக்கத்தினை (பொருந்தி யுள்ள), உடம்பு - சரீரத்தினை, உறு - பொருந்துதற்கு, ஏது - காரணமாக உள்ள, தந்தை - பிதாவை, என - (குரு) என்று, தக்கோர் - பெரியோர்கள், புகழ்கின்றிலர் - துதிப்பதில்லை, (அஷ்டைஶ்வரியங்கள் கந்தர்வாதிபதம் சார்வபௌமம் மந்திர தந்திராதி லௌகிக உபாயம் முதலியவற்றைக் கொடுப்பவர் துக்கத்தினைக் கொடுப்பவர் ஆகலின் குரு வாகார்) (எ - று.)

37-38-39-40 நாலு சுலோகார்த்தம் மூலத்தில் இருக்கிறது (41)

மெய்ம் மொழி.

**42. குருபாதம் பூசி நாளுங் குருநாமஞ் செபியெப் போதுங், குருபாதம் தியாகம் பண்ணு குருகீர்த்தி தோத்தி ரஞ்செய், குருபாத நினைக்கத் தீருங் குருத் தோட மல்லாத் தோடங், குருபாதந் தன்மே லுண்டோ குருவின்பேர் சிவனு மன்றே.**

(இ - ள்,) குரு - ஆசாரியரது, பாதம்-திரு அடியினை, நாளும்-திநந்தோறும், பூசி - பூசிப்பாயாக, குரு - ஆசாரியரது, நாமம் - நாமத்தினை, எப்போதும் - சதாகாலமும், செபி - செபஞ்செய்வாயாக, குரு - ஆசாரியரது, பாதம் - திருஅடியினை, தியாகம் - தியாநம், பண்ணு - செய்வாயாக, குரு - ஆசாரியரது, கீர்த்தி - பெருமையினை, தோத்திரம்செய் - துதிப்பாயாக, குரு - ஆசாரியரது, பாதம்-திரு அடியினை, நினைக்க-ஸ்மரிக்க, குரு - ஆசாரியருக்குச் (செய்த), தோடம் - தோஷம், அல்லா - அல்லாத, தோடம் - தோஷங்கள் (யாவும்), தீரும் - நிவர்த்தியாகும், குரு - ஆசாரியரது, பாதம் - திரு அடிகளுக்கு, மேல் - உயர்வாக, உண்டோ - (வேறு பொருள் உலகத்தில்) இருக்கின்றதா (இல்லை என்றபடி), குருவின் - (அதனால்) ஆசாரியரது, பேர் - நாமம், சிவன் ஆம் - சிவன் என்று சொல்லப்படும், (எ - று.) ஏ - தன் அன்று ஏ அசை. (42)

சொரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை 12-23 )

**43. வருபிறப் பறவே வேண்டினுன் மறையி றென்னுமம் புயத்தினை மலர்த்தற், கிரவியாய் நெஞ்சிற் கிசைந்த நற் குருவை யாதொரு வழியினு லிறைஞ்சி, யருள்சுரந் திடுதற் காவதே செய்வா னருமறை முடிவெலா மறையும், பொருளினே ராக வுமக்கெனக் கீசன் புகன்றவப் படியிலே புகன்றேன்.**

(இ - ள்.) வரு - (தனது கருமாதீநமாக) வருகின்ற, பிறப்பு - ஜநந (மரண சம்சாரம்), அற - நீங்க, வேண்டினுன் - விருப்புடைய

அதிகாரி, மறை ஈறு-வேதாந்தம், என்னும்-ஆகிய, அம்புயத்தினை - தாமரைப் புஷ்பத்தினை, மலர்த்தற்கு - விரியச் செய்வதற்கு, இரவி ஆய் - சூரியன் ஆக, நெஞ்சிற்கு - மநதிற்கு, இசைந்த - பொருந்திய, நல் - நல்ல, குருவை - ஆசாரியரை, யாது ஒரு வழியினுல் - எப்படியும், இறைஞ்சி - வழிபட்டு, அருள் - கிருபை, சுரந்திடுதற்கு - அதிகரிப்பதற்கு, ஆவது - ஆவதை, செய்வான் - செய்து முடிப்பான், அரும் - அரிய, மறைமுடிவு - வேதாந்தங்கள், எலாம் - யாவும், அறையும் - கூறும், பொருளை - (பிரஹ்ம) வஸ்துவினை, எனக்கு - எனக்கு, ஈசன் - பரசிவன், புகன்ற - உபதேசித்த, அப்படியிலே - அவ்வாறே, உமக்கு - உங்கட்கு, நேராக - சாக்ஷாத்தாக, புகன்றேன் - (யான்) கூறினேன், (எ - று.) ஏ அசை.

இது மூலத்தில் 45 - 46 சுலோகங்களின் பொருளாக இருக்கின்றது. (43)

ரிபு கீதை. (44 - 13.)

**44. ஆசிரியன் முன்பாக வகண்டார்த்தத்தை யடைவாக வறிவுற்ற மாணனந்தத், தேசிகனைத் திரவியமே முதலிருந்துந் திடமான லோபத்தாற் பூசியானேன், மோசநமே யிலாதவனுய்க் கும்பிபாக முதலியதில் வீழ்ந்திடுவ னுதலாலே, தேசிகனை யாவிபொரு ளாக்கையாலே திநந்திநமும் பூசிக்க வேண்டுமாணுன்,**

(இ - ள்.) ஆசிரியன் - குருவின், முன்புஆக - சந்நிதாநத்தில், அகண்ட அர்த்தத்தை - பிரஹ்மப் பொருளை, அடைவு ஆக - (சாஸ்திரத்திற் கூறிய) முறையாக, அறிவு உற்ற - உணர்ந்த, மாணன் - சிஷ்யன், அந்த - தனக்குப் பிரஹ்மப் பொருளை உபதேசித்த, தேசிகனை - குருவினை, திரவியம் முதல் - பொருள் முதலியன, இருந்தும் - இருந்தும், திடம் ஆன - திடம் பொருந்திய, லோபத்தால் - லோபத்தினுல், பூசியானேல் - பூசியாதிருப்பானுகில், மோசநமே இலாதவன் ஆய் - விடுதலேயே யில்லாதவனுய்க், கும்பிபாகம் - கும்பிபாகம், முதலியதில் - முதலிய (நகரத்)தில், வீழ்ந்திடுவன் -

வீழ்ந்துகிடப்பான், ஆதலால் - அதனால், மாணன் - மாணக்கன், தேசிகனை - குருவினை, திநம் திநம் - பிரதிதிநமும், ஆவி பொருள் ஆக்கையால் - உடற் பொருளாவி மூன்றினாலும், பூசிக்க வேண்டும்-பூசை செய்க, (எ - று.) ஏ ஏ ஏ அசை (44)

சிவ நெறிப் பிரகாசம்.

**45. தேசிகரு மாணவர்கள் செய்தியுணர்ந் திடவே சிறியோரைப் பெரியோர்செய் தொழிலதனிற் செறித்து, மேசிலராம் பெரியோரை யீநமாந் தொழிற்கே யிசைத்து மடித் தும்வைது மிவ்வாறு செயவுங், கூசியிடா திட்ட பணி செய்துகுரு பத்தி குறைவிலராய் நம்பினராய்த் துரோக மின்றி, மாசிலராய் மநவாக்குக் காயத்தாற் குரு வின் வாக்கியபா லநஞ்செய்யு மதிமானு மாயே.**

(இ - ள்.) தேசிகரும் - ஆசாரியரும், மாணவர்கள் - சிஷ்யர்கள், செய்தி - தன்மையினை, உணர்ந்திட - அறியும்பொருட்டு, சிறியோரை - சிறியவர்களை, பெரியோர் - மஹான்கள், செய் - செய்கின்ற, தொழிலதனில் - கைங்கரியங்களில், செறித்தும் - சேர்ப்பித்தும், ஏசிலர் ஆம்-நிந்தித்தற் கரியவராகிய, பெரியோரை - பெரியோர்களை, ஈநம் ஆம் - இழிவு ஆகிய, தொழிற்கு - கைங்கரியங்களில், இசைத்தும்-சேர்ப்பித்தும், அடித்தும் - தாடநஞ் செய்தும், வைதும் - நிந்தித்தும், இவ்வாறு - இம் முறையாக, செயவும் - செய்தும், கூசியிடாது - (மநத்தின்கண்) சங்கோசத்தினை அடையாது, இட்ட - (ஆசாரியர்) ஏற்படுத்திய, பணி - கைங்கரியத்தினை, செய்து - இயற்றி, குரு - ஆசாரிய, பத்தி - பக்தி, குறைவிலர் ஆய்-குறையாதவர்களாய், நம்பினர் ஆய் - விசுவாசம் உடையவர்களாய், துரோகம் - (குருத்)துரோகம், இன்றி - இல்லாதவர்களாய், மாசு இலர் ஆய் - குற்றம் இன்றியவர்களாய், மந வாக்கு காயத்தால் - மநம் வாக்கு காயம் என்னும் மூக்கரணங்களினாலும், குருவின் - ஆசாரியரது, வாக்கிய - வாக்கியத்தினை, பாலநம் - (பரி)பாலநம், செய்யும்-செய்கின்ற, மதிமானும் ஆய் - புத்தியுடையவனாக (இருந்து குரு

கிருபையினால் பிரஹ்மப் பிராப்தியாகக் கடவன்,) எ - று.)
ஏ-ஏ-ஏ- அசை. (45)

அருட் பிரகாசம்.

**46. குருபா னுக்கவ னெஞ்சகம் போலநு கூலத்த
னாய்க் கரசர ணாகியி னேவல்செய் தேதிநங் கட்கிமைபோ,
லுரியம னைமுதலியா வையுங்காத் துண்மையா யொருதற்,
பரமிவ னேயெனக் காண்பான்சற் சீடன்ப கர்ந்திடினே.**

(இ - ள்.) குருபானுக்கு - ஆசாரியருக்கு, அவன் - ஆசாரிய ராக, நெஞ்சகம் - மநம், போல் - போல, அநுகூலத்தன் ஆய் - அநுகூலம் உடையவனாய், கர சரண ஆகியின்-அஸ்த பாதாதி அவயவங் களினால், ஏவல் - பணிகளை, திநம் - நாடோறும், செய்து - இயற்றி, சட்கு - நேத்திரத்திற்கு, இமை - இமை, போல் - போல, உரிய - (ஆசாரியருக்கு) உரித்தாய் உள்ள, மனை - வீடு, முதல் - முதலிய, யாவையும் - யாவற்றினையும், காத்து - (தன் சொத்தைப் போல) ரக்ஷித்து, உண்மை ஆய் - யதார்த்தமாக, ஒரு - ஒப்பற்ற, தத் பரம் - அந்தப் பிரஹ்மமே, இவனே - இந்த ஆசாரியன், என - என்று, பகர்ந்திடின் - சொல்லுமிடத்து, சத் சீடன்-நன் மாணாக்கன், காண் பான் - உணர்வன், (எ - று.) ஏ அசை. (46)

அருட் பிரகாசம்.

**47. தேசிகன் பாற்பற் பலதீக் குணங்கள் செறி
யினுநம், பாசப்பி ராந்திக்கி வைதோற் றியவிறை பாலிலை
யென், றாசறு பத்தியி னோர்ந்தெவ் விதத்து மவனருளைத்,
தேசங்கு லவவ ளர்ப்போன்சற் சீடன்றெ ரிந்திடினே.**

(இ - ள்.) தேசிகன்பால் - ஆசாரியரிடத்து, பல் பல - அநேக, தீ - கெட்ட, குணங்கள் - குணங்கள், செறியினும் - பொருந்தி யிருப்பினும், நம் - நம்முடைய, பாசப் பிராந்திக்கு - அறியாமை யோடு கூடிச் சலிக்கின்ற மநதிற்கு, இவை-இக் குற்றங்கள், தோற்

றிய - தோற்றின, இறைபால் - ஆசாரியரிடத்து, இலே - (இக் குற்றங்கள்) இல்லை, என்று-என, ஆசு அறு - குற்றம் அற்ற, பத்தியின் - பக்தியினுல், ஓர்ந்து - உணர்ந்து, எவ்விதத்தும் - எவ்வாற்றுலும், அவன் - ஆசாரியாது, அருளே - கருணையினை, தேசம் - ஊர்கடோறும், குலவ - விளங்கும்படியாக, தெரிந்திடின்-விசாரிக்குமிடத்து, சத் சீடன்-நல்ல மாணுக்கன், வளர்ப்போன்-விருத்திக்குக் கொண்டு வருவான், (எ - று.) ஏ அசை. (47)

அருட் பிரகாசம்.

**48. விடையேறி யீசன் வரின்மூட ரும்மவன் வேண்டியதைப், படிமீத ளிப்பர்கு ருவேசி வமெனப் பாவனை முற், றுடையார்க ளடத்த முடலாவி யீந்திறை யுண்மை பெறத், தடையாது ளவிங்கு ளதேல பக்குவர் தாமவரே.**

(இ - ள்.) ஈசன் - பரமசிவன், விடை ஏறி-ரிஷபவாஹநரூடராய், வரின்-வருவாராயின், மூடரும் - அறிவிலியும் கூட, அவன் - பரமசிவன், வேண்டியதை - விரும்பியவற்றை, படிமீது - பூமியின் கண், அளிப்பர் - கொடுப்பார்கள், குருவே-(அங்ஙனமாயின்) ஆசாரியரே, சிவம் - சிவ ஸ்வரூபமாம், என- என்னும், பாவனை முற்று உடையார்கள் - பூரண பாவனை யுடையவர்கள், தத் தம்-தமது தமது, உடல் ஆவி-உடல்(பொருள்) ஆவிகளை, ஈந்து - கொடுத்து, இறை - பிரஹ்ம, உண்மை - சாக்ஷாத்காரத்தினை, பெற - அடைய, தடை - விக்கிநம், யாது உள - என்னை இருக்கின்றது (ஒன்றும் இன்று என்றபடி), உளதேல் - தடை இருக்குமாயின், அவர் - அம்மாணுக்கர், அபக்குவர் தாம் - பக்குவம் அற்றவரே யாவர், (எ - று.) இங்கு ஏ அசை. (48)

ஒழிவி லோடுக்கம்.

**49. உடற்குயிர்போற் கட்கிமைபோ லாசிறு லொத்து, விடிற்புலிதீப் பர்ம்பினில்வீழ் வார்க்காஞ் - சுடர்ச்சுடினும், வாழைக்கா காவேதி மட்கலத்திற் காகாவா, றேழைக்கா காத திது.**

(இ - ள்.) உடற்கு - உடம்பை, உயிர் - உயிர், போல் - (அபிமானித்தல்) போலும், கட்கு - கண்ணை, இமை - இமையானது, போல் - (காத்தல்) போலும், ஊசி - ஊசி (சென்ற இடந் தோறும்), நூல் - சரடு, ஒத்து - (பின் சேறல்) போலும் (ஞானாசாரியரைப் பிரியாது நின்று அவர் திருமேனியை அபிமானித்தும் பாதுகாத்தும் அவர் திருவுள்ளக் குறிப்பின்படியே சென்றும் வழிபட்டு), புலி-(அவர் பார்த்து) புலி, தீ-தீ, பாம்பினில்-பாம்பாதிகளில், விடினு - செலுத்தினும், வீழ்வார்க்கு - (பின்னிடையாது அவைமேல்) விழும் அதிபக்குவர்க்கே, ஆம் - (இந்நூல்) கொடுக்க லாகும், சுடர்-(மிகுந்த) அக்கினியால், சுடினும்-சுடினும், வாழைக்கு-வாழைத்தண்டை, ஆகா - (சுடக்)கூடாத வாறு போலும், வேதி - (பரிசு)வேதி, மட்கலத்திற்கு - மட்கலத்திற் பரிசித்து, ஆகா - (பொன்னுக்கக்) கூடாத, ஆறு - ஆறு போலும், ஏழைக்கு - (அங்ஙனம் ஆசாரியரை வழிபட மாட்டாத) அபக்குவர்க்கு, இது - இந்நூல் (கொடுப்பினும்), ஆகாதது - அநுபவம் சித்தியாது, (எ - று.) (49)

வாசிட்டம் (நிருவாணப் பிரகாணம்-தேவ பூசை கதை.)

**50. ஆசான் மொழியா னூற்பொருளா லன்றிப் பெறவு மரிதாகுந், தேசார் குருநூன் மாணுக்கன் சிறக்க விம்மூ வருங்கூடிற், பாசா தீதப் பரமெய்தும் பன்னு ணீங்கா விக்கூட்ட, மேசா வுணர்வைத் தரும்பகற்போ தெல்லாத் தொழிலுந் தருவதுபோல்.**

(இ - ள்.) ஆசான் - குரு, மொழியால் - உபதேசத்தானும், நூல் பொருளால் - சாஸ்த்ரார்த்தத்தானும் அன்றி - , - , பெறவும் - (ஆத்மாவினை) அடைதல், அரிது ஆகும் - முடியாததாம், தேசு ஆர் குரு - ஞானாசாரியர், நூல் - (சாஸ்த்ரார்த்தம்), மாணுக்கன் -சிஷ்யர், இம் மூவரும்-(எனனும்) இம் மூவரும், சிறக்க - நன்கு, கூடில் - சேர்ந்திருக்கில், பாச அதீத பரம் - மாயாதீதப் பிரஹ்மத்தினை, எய்தும் - அடையும்படியான, நீங்கா - இடைவீடின்றிய, பல் நாள் - சிறுள், இக் கூட்டம்-சேர்க்கையினுல், பகல் போது - பகல் காலம்,

எல்லாத் தொழிலும் - ஜநாசாரங்களே, தருவது - செய்வது, போல்-போல, ஏசா - குற்ற மற்ற, உணர்வை - (ஆத்ம)ஞானம், தரும் - உண்டாம், (எ - று.) (50)

ஶாஸ்த்ரோபதேஶஸாமர்த்யா-
த்விநாவாத்மா நவாப்யதே ।
தத்ஸம்யோகஸமேதஸ்து
ஸ்வாத்மஜ்ஞாந ப்ரகாஶிநி ॥ ॥௩௦॥

(இ-ள்.) குரு உபதேசத்தானும் சாஸ்திரார்த்தத்தானும் அன்றி ஆத்மா அறியப்பட மாட்டாது. இவற்றின் சேர்க்கையே தனது ஆத்ம ஞானத்தினைப் பிரகாசிப்பதாம். (30)

ஸ்ரீகுருஶாஸ்த்ரார்த்தஶிஷ்யாணாம்
சிரஸம்யோகஸம்பதா ।
அஹநீவ ஜநாசார
ஆத்மஜ்ஞாநம் ப்ரவர்த்ததே ॥ ॥௩௧॥

"குரு சாஸ்திரார்த்த சிஷ்யர்களின் நீண்ட காலச் சேர்க்கையினால் பகலில் லோக வியவகாரம் போல் ஆத்ம ஞானம் பிரவர்த்திக்கின்றது." என்று இதன் மூலத்தில் கூறப்பட்டிருக்கின்றது. (31)



சீடாசாரம் மூலமும்
பால போதினி என்னும் உரையும்
முற்றுப் பெற்றன.

---




NOBLE PRESS, MADRAS.